# பொருளடக்கம்

மலர் 19] மே 1967 [இதழ் 11

ஹிஜ்ரீ 1387 முஹர்ரம்– ஸபர்

| | | | |
|---|---|---|---|
| தலையங்கம் | 5 | பழமொழி ஆயிரம் | 44 |
| முரசொலி | 9 | வெற்றிமேல் வெற்றி | 33 |
| கண்டதும் கேட்டதும் | 10 | சிறுகதை | 17 |
| தொடர் கதை | 49 | கேள்வி பதில் | 60 |

மற்றும் பல சுவையான கட்டுரைகள், கேள்வி—பதில்கள்

முஸ்லிம் முரசில் வெளியாகின்ற
கதைகளில் வரும் சம்பவம், பெயர்கள் யாவும் கற்பனையே!




# மதசார்பற்ற ஜனாதிபதி!

இந்தியாவின் ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு பதவியேற்றிருக்கும் டாக்டர் ஜாகிர் ஹுஸைன் அவர்களைப் பாராட்டி மனமார வாழ்த்துகிறோம்.

துணை ஜனாதிபதியாக வந்திருக்கும் உயர் திரு வி. வி. கிரி அவர்களும் நம் பாராட்டுகளுக்கும் வாழ்த்துகளுக்கும் உரியவர்.

இருவருமே காங்கிரஸ்காரர்களாக இருந்தும், குறுகிய கட்சி மனப்பான்மைகளுக்கு அட்பாற்பட்டவர்களாக நடந்து வந்து, முறையே கல்வித் துறையிலும், தொழிலாளர் நலத்திற்காகவும் சிறந்த முறையில் பணியாற்றியவர்கள்; அதன் மூலம் மற்றக் கட்சியினரின் பெருமதிப்புக்கு ஆளானவர்கள். காங்கிரஸ்காரர்களின் வாக்குகள் மட்டுமல்லாமல், இருவருக்கும், எதிர்க்கட்சியினரின் வாக்குகளும் கூட கணிசமான அளவில் கிடைத்திருப்பதே அதற்குச்சான்றாகும்.

ஆனால், டாக்டர் ஜாகிர் ஹுஸைன் அவர்களுடைய வெற்றி குறித்து உண்மையாகவே பாராட்டப்பட வேண்டிய ஒரே ஒரு நபர், இந்தியப் பிரதமரான திருமதி இந்திரா காந்தி அம்மையார்தான். அவருடைய பிடிவாதமே இறுதியில் வென்றது. அவர் மட்டும் அவ்வளவு உறுதியாக நடந்து கொண்டிராவிட்டால் டாக்டர் ஹுஸைன் அவர்கள் அவ்வுயர் பதவிக்கு காங்கிரஸ் கட்சியின் வேட்பாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கவே முடியாது!

டாக்டர் ஜாகிர் ஹுஸைன் அவ்வாறு நியமனம் பெற்றுவிட்ட பிறகு, தம் எதிர்கால அரசியல் வாழ்வையே பணயம் வைத்தார், திருமதி இந்திரா. டாக்டர் ஹுஸைன் தோற்றால் தாம் ராஜிநாமா செய்வது உறுதி என்று அவர் விடுத்த எச்சரிக்கை, சஞ்சல சுபாவம் கொண்ட காங்கிரஸ்காரர்களை சரிப்படுத்தியது. சரிபாதி ராஜ்யங்களில் காங்கிரஸல்லாத மந்திரி சபைகள் ஆளும்போது, மத்தியிலும் காங்கிரஸ்

மந்திரிசபை கவிழ்ந்தால் மறு தேர்தல் நடப்பது உறுதிஎன்பது தெளிவாயிற்று. அது போன்ற, ஒரு விஷப் பரீட்சைக்கு உட்பட ஜனதிபதிதேர்தலில் வாக்குரிமை பெற்ற காங்கிரஸ்காரர்கள் தயாராக இல்லை. அது மட்டுமன்றி, பார்லிமெண்டு வாக்குகள் தனியாகவும், ஒவ்வொரு ராஜ்ய சட்டமன்றத்திலும் பதிவான வாக்குகள் தனித்தனியாகவும் எண்ணப்பட வேண்டியதாக இருந்தால் எங்காவது கட்சிக்குள்ளேயே துரோகம் நிகழ்ந்தால் தெரிந்துவிட வாய்ப்பு உண்டு என்ற நிலைமையும் டாக்டார் ஹுஸைனின் வெற்றிக்கு உதவியது. காங்கிரஸ் கட்சி வாழ்வதா, சாவதா என்ற பிரச்னையோடு ஜனதிபதி தேர்தல் சம்பந்தப் பட்டிருந்ததனலேயே டாக்டர் ஜாகிர் ஹுஸைன் தேர்ந்தெடுக்கப்பட்டார் என்பது தான் உண்மை;

இத் தேர்தலின் மூலம் இந்தியாவின் மதசார்பற்ற தன்மை உறுதியாகி விட்டது என்று கூறுவதில் பொருளில்லை. காலமெல்லாம் சித்திரவதைக்குள்ளாகி வரும் "மதசார்பின்மை" இத் தடவை பலியாகாமல் எப்படியோ தப்பிப் பிழைத்துக் கொண்டது என்றுதான் சொல்லத் தோன்றுகிறது.

ஜனதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டதற்காக உலகம் முழுவதும் அவருக்குப் பாராட்டுத் தெரிவித்துக் கொண்டிருக்கும் போது, பதவி ஏற்பதற்கு முன்பும் பதவி ஏற்பின்போதும் அவர் நடந்து கொண்ட முறை பற்றி கடுமையான அபிப்பிராய பேதங்களும் தோன்றியுள்ளன.

பதவியேற்புக்கு முந்திய நாளன்று, டாக்டர் ஜாகிர் ஹுஸைன் அவர்கள் டில்லியில் முகாம் செய்திருக்கும் சிருங்கேரி மடாதிபதி சங்கராசாரியார் அவர்களைப் போய்ப்பார்த்து, அவருடைய பாதங்களில் மலர்களையும் கனிகளையும் வைத்து வணங்கி, அவரை ஆசீர்வதிக்கச் செய்து, பேசிக்கொண்டிருந்து விட்டுத் திரும்பும்போது மீண்டும் அவருடைய பாதங்களைத் தொட்டு வணங்கிவிட்டு வந்ததாக பத்திரிகைச் செய்திகள் கூறின. அதை அடுத்து அவர் ஜைன முனிவர் ஒருவரையும் சந்தித்து வணங்கி ஆசி பெற்று வந்ததாகவும் செய்தி வந்தது.

பதவி யேற்றவுடன் அவர் பேசும்போது, காந்திஜீ, நேருஜீ, ராஜேந்திர பிரசாத், லால்பஹதூர் சாஸ்திரி, இந்திரா காந்தி போன்றவர்களும் கூடக் கையாளாத, கடினமான இந்தியில் பேசினர். அப்பேச்சின்போதும், "நமது நாட்டின் தொன்மையான பண்பாடு, நம் கலாச்சாரம்" ஆகியவற்றைப் பேணிப் பாதுகாப்பேன் என்றெல்லாம் மிக அழுத்தம் திருத்தமாகப் பேசி வாக்குறுதிகள் கொடுத்தார்.

அவர் ஒரு முஸ்லிமாக இருந்தும் இந்தியாவின் ஜனதிபதியாகிவிட்டபடியால், இப்படியெல்லாம் பேசித் தம் அந்தரங்க சுத்தியைக் காட்டிக் கொள்ள வேண்டிய நிர்ப்பந்தத்திற்கு ஆளாகி விட்டிருக்கிறர் என்று நாம் மட்டும் நினைக்கவில்லை. "ஸ்டேட்ஸ்மன்" போன்ற ஒரு நடு நிலைமை ஆங்கில நாளிதழ் கூட விமர்சித்து, வருந்தியிருக்கிறது. பெரும்பான்மை சமூகத்தினரை இவ்விதமாகத் திருப்திப் படுத்தத் துவங்கியிருக்கும் ஜனதிபதியின் நடவடிக்கைகள் எங்குபோய் நிற்கும் என்ற கவலை தோன்றுகிறது.

முஸ்லிம் ஒருவர் இந்தியாவின் ஜனதிபதியாகப் பதவி வகிக்க விரும்பினல், ஓர் ஹிந்து ஜனதிபதி என்னென்ன வெல்லாம்

செய்வாரோ அத்தனையும் அவரும் செய்யத் தயாராக இருக்க வேண்டும் என்ற நிர்ப்பந்த நிலை இருக்குமாயின் அப்போது இந்தியாவின் மதசார்பற்ற தன்மைக்கு அர்த்தமே இல்லை.

ஒருவர் எவ்வளவு பெரிய மதத் தலைவராக இருப்பினும், அவர் முஸ்லிமாகவே இருந்தாலும் கூட, அவருடைய பாதத்தில் மலர் வைத்து வணங்குவது ஒரு முஸ்லிம் செய்யத்தகாத, இணைவைக்கும் கொடிய பாவச் செயல் என்பதை அவருக்கு நினைவூட்ட விரும்புகிறோம்.

ஜனாதிபதி பதவி வகிக்கும் காலத்தில், ஓர் உண்மை முஸ்லிம் எவ்வாறு நடக்க வேண்டுமோ அவ்வாறு அவர் நடந்துகொள்ள முடியாது எனின் "எங்களுடைய ஜனாதிபதி ஒரு முஸ்லிம்!" என்று கூறிப் பெருமைப்பட யாருக்கும் உரிமையில்லை. அந்த நிலைமையில் அப்பதவியில் அமர்ந்திருப்பவருக்கும் அது கண்ணியம் அளிப்பதாக ஆகாது என்பதை மனத்தில் கொள்ளும்படி, ஜனாதிபதி பதவிக்குரிய மரியாதையோடு டாக்டர் ஜாக்கிர் ஹுஸைன் அவர்களைக் கேட்டுக் கொள்கிறோம்.

---

# திருமணம்

கரைப்பாக்கம், ஏனங்குடி ஜனாப். ஆர். எம். முஹம்மது இப்ராஹீம் அவர்களின் புதல்வி ஹபீபுன்னிஸா மணமகளுக்கும், கொல்லாபுரம் (மர்ஹூம்) இ.கே. பீர்முஹம்மது அவர்களின் புதல்வர் ஜெஹபர் மணமகனுக்கும் 10—5—67 அன்று மணமகள் இல்லத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

★ ★

கும்பகோணம் ஜனாப் ஈ. முஹம்மது கௌஸ் சாஹிப் அவர்களின் செல்வன் மீர் ஜெய்னுத்தீனுக்கும், ஜனாப் ஏ. அப்துர் ரஹீம் அவர்களின் செல்வி மஜஹருன்னிசா பேகத்துக்கும் 3-4-67-ல் சிறப்பாக திருமணம் நிகழ்ந்தது.

★ ★

(பர்மா பேப்பர் ஸ்டோர்ஸ் ஸ்தாபகர்) ஏர்வாடி ஜனாப் பா. செ. கா. முஹம்மது தஸ்தகீர் அவர்களின் புதல்வி உம்முசவ்தா பேகத்துக்கும், பண்டுலா பேப்பர் ஸ்டோர்ஸ் மானேஜிங் பார்ட்னர் ஜனாப் வி. மு. செய்யது இப்ராஹீம் அவர்களின் புதல்வர் இக்பால் சுல்தானுக்கும் 27-4-67-ல் திருமணம் இனிதே நடைபெற்றது.

★ ★

கோயம்புத்தூர் ஜனாப் டி. கே. முஹம்மதுகனி ராவுத்தர் அவர்களின் செல்வி மெஹ்ருன்னிஸாவுக்கும், ஆலத்தூர் ஜனாப் எம். அப்துல் காதர் ஸாஹிப் அவர்களின் செல்வர் அப்துல் ரஹ்மானுக்கும் 30—4—67-ல் சிறப்பாக திருமணம் நடந்தேறியது.

★ ★

கீழக்கரை ஜனாப் செ. மு. லெப்பைத் தம்பி (மர்ஹூம்) அவர்களின் புதல்வர் ஜகுபர் சாதிக் மணமகனுக்கும், ஜனாப் எம். எஸ். எம். புஹாரி அவர்களின் புதல்வி ஜீனத் பீவி மணமகளுக்கும் 7—5—67-ல் திருமணம் நடைபெற்றது.

★ ★

# வாசகர்களுக்கு ஓர் நற்செய்தி!

சங்கையான ரபீயுல் அவ்வல் நெருங்கிக்கொண்டிருக்கிறது. அகிலம் போற்றும் நபிகள் நாயகம் முஹம்மத் (ஸல்) அவர்களின் வாழ்வும் வாக்கும் அடங்கிய சிறப்பான மவுலூத் தென்னகமே வியக்கும் வகையில் வெளியிட்டிருக்கிறோம். அழகிய பெரிய அரபு எழுத்துக்களில் உயர்ந்த கிளேஸ் காகிதத்தில் அச்சிட்டு காலிகோபைண்ட் செய்யப்பெற்றது.

## 5 மவுலூது விலை ரூ. 6-60

சுபுஹான மவுலூது கொதுல் அஃலம் (ரலி) மீரான் சாஹிப் (ரலி) பர்ஸன்ஜி, இமாம் ஹஸன், ஹுஸைன் (ரலி) மவுலூதுகள் மற்றும் விடுபைத்துகளுடன் அடங்கியது.

## 7 மவுலூது விலை ரூ. 8

மேற்சொன்ன மவுலூதுகளுடன், பத்ரீன் மவுலூதும், புர்தாவுடன் துஆக்களுடன் கூடியது 432-பக்கம்.

## கஸீதத்துல் வித்திரியா விலை ரூ 12

மேற்சொன்ன 7 மவுலூதுடன் வித்திரியா சேர்க்கப் பட்டது 648. பக்கம்

## தஃலீமுல் இஸ்லாம் ஹனபீ ரூ. 5

(ஹஜ்யாத்திரை விளக்கம் சேர்ந்தது)

தமிழாக்கம்: அல்ஹாஜ் மௌலவி முஹம்மது அப்துல் காதர் சாஹிப் (பாகவி) தொழுகைக்கு ஓத வேண்டிய ஸூருக்களும், சூரத்துல் பாத்திஹா முதல், சூரத்துல் லைல் வரை. ஒருவரி அரபியும் ஒருவரி தமிழும், அதன் பொருளும் விரிவுரையும் சேர்ந்தது.

| | |
|---|---|
| குத்பா கொத்து (ஒரேவால்யூம்) விலை | 10-00 |
| ஞானிபானு | 0-50 |
| அல் அன்வார் | 0-50 |
| அகத்தூய்மை | 1-00 |
| சுபஹான மவுலூத் மாலை | 1-00 |
| அபூ நவாஸ் அற்புத விகடம் | 0-75 |

### அச்சில்

| | |
|---|---|
| தஃலீமுல் இஸ்லாம் (ஷாபீ) | 6-00 |
| மிஸ்பாஹுன் நிக்காஹ் | 3-60 |
| ஷஹீதே கர்பலா | 4-00 |

**தஃலீமுல் இஸ்லாம் புக் டிப்போ,**
41, டாக்டர் பெஸண்ட் ரோடு,
ராயப்பேட்டை :: சென்னை-14.

விற்பனை நிலையம் ;
642, திருவல்லிக்கேணி ஹைரோடு, சென்னை-5.




# ரூபாய்க்கு ஒருபடி அரிசி!

'ஆகாசக்கோட்டை,' 'தேர்தல் ஸ்டண்ட்,' 'பொறுப்பற்ற பேச்சு' என்றெல்லாம் எதிர்க்கட்சிகள் வர்ணித்து வந்த ரூபாய்க்குப் படியரிசி திட்டம் இம்மாத மத்தியிலிருந்து அமலுக்கு வந்துள்ளது.

தமிழகத்தின் மக்கள் தொகையில் பத்திலொரு பங்கான சென்னை, கோவை நகரவாசிகளுக்கு மட்டும் முதலில் இத்திட்டத்தினால் நன்மை கிடைத்திருக்கிறது மற்றப்பகுதிகளிலும் காலக்கிரமத்தில் நியாய விலைக் கடைகள் திறப்பதன் மூலம் இத்திட்டம் விரிவு படுத்தப் படும் எனத் தமிழக முதலமைச்சர் கூறியுள்ளார்.

நம் முன்னாள் ஆட்சியாளர்கள், தி. மு. க. ஆட்சியின் முற்போக்கான திட்டங்களையும் வெற்றிகளையும் கண்டு பொறாமைப் படுவது இயற்கையே. ஆனால் அது வயிற்றெரிச்சலாகவும் குமுறளாகவும் வெளிப் படும்போதுதான் அவர்களைப் பார்த்து நமக்கு நகைக்கத் தோன்றுகிறது. காங்கிரசிலுள்ள சிறந்த அறிவாளிகள் என்று பெயர் பெற்றவர்கள் எல்லாம் கூட சிறுபிள்ளைத் தனமான வாதங்களில் இறங்கும் போது அவர்களின் நிலைமையைக் கண்டு நமக்கு இரக்கம் தோன்றுகிறது.

"ரூபாய்க்கு ஒருபடி அரிசித் திட்டம், சென்னை கோவை வாசிகளுக்கு மட்டும் ஏன்?" என்று தமிழகத்தின் முன்னாள் முதலமைச்சர் திரு. எம். பக்தவத்சலம் அவர்கள் கேட்டிருக்கிறார். இக்கேள்வியைக் கேட்பதற்கு முன்பாக அவர் சட்ட பூர்வமான ரேஷன் முறையை சென்னை கோவை ஆகிய இரு நகரங்களில் மட்டுமே அமல் நடத்தியது ஏன் என்று அவர் தம்மைத்தாமே கேட்டுக்கொண்டிருக்க வேண்டும்.

மக்களுக்கு நன்மை தரும் திட்டங்களை யார் நடத்திக் காட்டினாலும், அதற்கு ஒத்துழைப்பளித்து நியாயமான குறைகளை எடுத்துக் காட்டுகிறவர்கள்தான் மக்களின் உண்மையான நண்பர்களாக முடியும். பொதுமக்களுக்கும் தமக்கும் தொடர்பு அற்றுப் போய் விட்டதை நிரூபித்துவிட்ட காங்கிரஸ் கட்சி அவர்களுடைய ஆதரவைத் திரும்பப் பெறுவதற்கு கடைப்பிடிக்க வேண்டிய வழி இதுவல்ல என்று அவர்களுக்கு நினைவூட்ட விரும்புகிறோம்.

உணவுப் பொருள்களின் விலைகளை மான்யங்களின் மூலமேனும் குறைக்க நடவடிக்கை எடுத்தால் மற்ற பொருள்களின் விலைகளும் குறைய வாய்ப்புண்டு. எனவே தற்போது காஷ்மீர் ராஜ்யத்தில் மட்டும் உணவுப் பொருள்களை பாதிவிலைக்கு விற்க உதவும் மத்திய அரசு அதே உதவியை மற்ற மாநிலங்களுக்கும் அளிக்க முன்வரும்படி கோருகிறோம்.




"உலகின் வெடி மருந்து கிடங்கு" என்று அடிக்கடி வர்ணிக்கப்பட்டு வந்துள்ள மேலை ஆசியப் பகுதியில் யுத்த மேகங்கள் மீண்டும் சூழ்ந்து வருகின்றன. அரபு நாடுகளுக்கும் இஸ்ராயீலுக்கும் இடையே எந்த நிமிடமும் போர் மூளக்கூடிய அபாயம் தோன்றியுள்ளது. இஸ்ராயீலுக்கு அமெரிக்கா, பிரிட்டன் போன்ற மேலை நாடுகள் ஆதரவாகவும் அரபு நாடுகளுக்கு ரஷ்யா போன்ற கம்யூனிஸ்டு நாடுகள் பக்கபலமாகவும் இப்போது இருப்பதால் இந்த நிலைமை உலக யுத்தமாக மாறவும் இடமிருப்பதாக அஞ்சப்படுகிறது.

இஸ்ராயீலிகள் அடிக்கடி ஸிரியா நாட்டுக்குள் நுழைந்து தாக்கி வருகிறார்கள். ஸிரியாவுக்கும் ஐக்கிய அரபுக் குடியரசுக்கும் இடையே இராணுவ ஒப்பந்தம் இருக்கிறது. ஸிரியாவுக்குள் நுழைந்து அதன் தலைநகரான டமாஸ்கஸ் (திமிஷ்கு) நகரைக் கைப்பற்றப் போவதாக இஸ்ராயீலி பிரதமரும் அயல் விவகார மந்திரியும் பேசினர். ஐ. அ. கு. ஜனாதிபதி நாஸர் இஸ்ராயீலிகளின் ஆக்கிரமிப்பு நடவடிக்கைகளுக்கு எதிரான சில நடவடிக்கைகள் எடுத்துள்ளார், அதுதான் ஸவூதி அரபு நாட்டுக்கும் ஐ. அ. குடியரசு நாட்டுக்கும் இடையிலுள்ள சிறு கால்வாய் போன்ற அக்கபா வளைகுடாக் கடலுக்குள் இஸ்ராயீலி கப்பல்கள் போகவிடாமல் தடை செய்வதாகும். அது தனது உள் நாட்டுக் கடல் என்கிறார் நாஸர். அந்த நிலைமையை சென்ற பத்தாண்டுகளாக இந்தியாவும் ஆதரித்து வந்துள்ளது. அது உலக நாடுகளுக்குப் பொதுவான கடல் பகுதி என்கின்றன மேலை வல்லரசுகள்.

இஸ்ராயீலுக்கும் அரபு நாடுகளுக்கும் பகைமை எப்படித் தோன்றியது, இஸ்ராயீல் அதன் இஷ்டப்படி நடந்தால் அரபு நாடுகளுக்கு என்ன வந்தது என்றெல்லாம் பலர் கேட்கிறார்கள். அவர்களில் பலருக்கு சென்ற இருபதாண்டுகளுக்கு முந்திய வரலாறு தெரிந்திருக்காது. தெரிந்திருந்தாலும் மறந்திருப்பார்கள். இந்தியாவில் பார்ஸிகள் என்றொரு வகுப்பினர் இலட்சக்கணக்கில் இருக்கிறார்கள். இவர்களின் மூதாதைகள் பாரசீகம் என்னும் ஈரான் நாட்டின் குடிகள். ஈரான் நாட்டில் வேகமாக இஸ்லாம் பரவிய போது அங்கிருந்தால் தங்களுடைய மதக் கொள்கைகளுக்கு ஆபத்து வரும் என்று அஞ்சி குடி பெயர்ந்து வந்தவர்கள். நெருப்பை வணங்கும் ஜொராஸ்திரிய மதத்தினர் இவர்கள்.

"பாவம், ஜொராஸ்திரியர்களுக்கு என்று ஒரு தனி நாடு இல்லையே! ஒரு காலத்தில் அவர்கள் வாழ்ந்த ஈரான் நாட்டிலே

மிய அவர்களுக்கு என்று ஒரு பகுதியைக் கைப்பற்றிக் கொடுத்து ஜொராஸ்திரிய நாடு ஒன்று அமைத்துக் கொடுப்போம்!" என்று நினைத்து இந்தியாவோ அல்லது ஐ. நா. வோ முயற்சி செய்து வெற்றியும் பெற்ருல் அது நியாயமான செயலாகக் கருதப்படுமா?

அதே போன்ற அக்கிரமம், அநியாயம் ஒன்றின் விளைவாகத் தோன்றியதுதான் இஸ்ராயீல் நாடு என்று கேள்விப்படும் போது பலருக்கு அது வியப்பாக இருக்கலாம். அந்த அக்கிரமம் நடந்து 20 ஆண்டுகூட முடியவில்லை என்னும்போது அதற்கு மேல் வியப்பாக இருக்கும். அதை முன்நின்று நடத்தியது அமெரிக்கா. அதற்குப் பக்கபலமாக இருந்தனர். பிரிட்டன் போன்ற மேலை நாட்டு வல்லரசுகள். இஸ்ராயீல் தோன்றிய 1948-ஆம் ஆண்டில் ஐ. நா. சபையை தனது இஷ்டப்படி ஆட்டி வைக்கும் வல்லமை பெற்றிருந்தது யு. எஸ்.

அரபியருக்குச் சொந்தமான பலஸ்தீனத்தில் யூதருக்கு இடம் பிடித்துக் கொடுத்து அது ஒரு நாடாக நிலை பெற உதவிய அமெரிக்கா அதன் மூலம் இஸ்லாமிய நாடுகளுக்கு மத்தியில் நன்கு காலூன்றிக் கொண்டது பல இலட்சம் அரபியர்வெளியேற்றப்பட்டு 20 ஆண்டுகளுக்குப் பிறகும் அண்டை அரபு நாடுகளில் ஐ.நா. உதவி பெறும் அகதிகளாக அவல வாழ்வு வாழ்கின்றனர், இஸ்ராயீலுக்குள்ளேயே தங்கி விட்ட சுமார் 3 லட்சம் அரபியர் இரண்டாந்தர பிரஜைகளாக இருக்கிருர்கள். இவ்வளவுக்கும் இஸ்ராயீல் நாட்டின் இன்றைய ஜனத்தொகை மொத்தம் 26 இலட்சம்தான். சென்னை நகர ஜனத்தொகையைவிட 2 அல்லது 3 லட்சம் அதிகம். 1948-இல் அந்த நாடு தோன்றியபோது அதன் ஜனத்தொகை எட்டு லட்சத்துக்கும் குறைவாக இருந்தது. பத்து ஆண்டுகளுக்கு முன் பிரிட்டனும் பிரான்சும் இஸ்ராயீலுடன் சேர்ந்து ஐ. அ. குடியரசைத் தாக்கின. இறுதியாக ரஷ்யா எச்சரித்த பிறகு அந்த நடவடிக்கை முடிவுற்றது.

இப்போதும் இஸ்ராயீலி ராணுவத்தில் இரண்டரை லட்சம் பேர் இருக்கிருர்கள். அமெரிக்க விமானங்களும், டாங்கிகளும் கப்பல்களும் பெருமளவில் அதற்குக் கிடைக்கின்றன. அமெரிக்க டாலர் கோடி கோடியாக வந்து சேர்ந்துகொண்டே இருக்கிறது.

அச் சிறு நாட்டின் திமிரான நடவடிக்கைகளுக்குக் காரணம் இப்போது புரிகிறதல்லவா?



சென்னை லிபர்ட்டி மோட்டார் ஸ்டோர்ஸ் அதிபர் ஜனுப் எஸ். அப்துர் ரஸ்ஸாக் அவர்களின் மச்சான் வள்ளக்குளம் எஸ் பி. முஹம்மது கஸ்ஸாலி (பினங்கு ரம்சான் ரெஸ்ட்டா ரெண்ட் அதிபர்) அவர்களும் அவர்களுடன் சென்ற மற்றும் ஏழு பேரும் புனித ஹஜ்ஜுக் கடமையை இனிது நிறைவேற்றிவிட்டு 19-5-67 அன்று சுகமாக சென்னை திரும்பினுர்கள். ஹஜ்ஜாஜிகளை வரவேற்க உறனவினரும் நண்பர்களுமாக சென்னை சென்டிரல் ரயில் நிலயத்தில் திரண்டிருந்து மாலை அணிவித்தனர்.

இவ்வாண்டு ஹஜ்ஜுக் கடமையை நிறைவேற்றச் சென்றிருந்த மதுரை "அல் இஸ்லாம்" பத்திராதிபர், மௌலவீ, முப்தீ, கா. சையத் அப்துல் கபூர் சாஹிப் அவர்களும், அவர்களின் மனைவியாரும் இஸ்லாமிய சமூக ஊழியருமான சகோதரி ஐ. ஜைனப் பேகம் அவர்களும் தம் ஹஜ்

யாத்திரையை முடித்துக் கொண்டு 21-5-67 அன்று சென்னை திரும்பினர்.

  

நம் நாடு சுதந்திரம் பெற்ற நாளான 15—8—1947 அன்றிலி ருந்து பன்னிரண்டு ஆண்டு கால கெடுவுக்குள்ளாக வக்பு சொத் துக்கள் தர்ம சொத்துக்களென்று வக்பு போர்டுகளால் பதிவு செய் யப் படாமல் இருந்தால் அவை அவற்றை ஆக்கிரமித்து அனுப வித்து வருவோருக்கே சொந்த மாகிவிடும் என்ற சட்ட பூர்வ மான நிலைமை இருந்து வந்தது.

முஸ்லிம் தலைவர்களின் பெரு முயற்சியின் பயனுக அக் கால கெடு மேலும் எட்டு ஆண்டுகள் நீடிக்கப்பட்டு, 14—8—1967 தேதி க்குள் அவை கண்டுபிடிக்கப்பட்டு பதிவாக வேண்டும் என்று வகை செய்யப்பட்டது. அந்த கெடு முடி வடைய இன்னும் இரண்டரை மாதங்களே இருக்கின்றன. அதற் குள்ளாக தத்க நடவடிக்கைகள் எடுக்கப் படாவிட்டால் நாடெங் கிலுமுள்ள பல நூறு கோடி ரூபாய் பெறுமானமுள்ள வக்பு சொத்துக்கள், தர்ம காரியங்க ளுக்குப் பயன்படாமல் ஆக்கிர மிப்பாளரின் சொந்த சொத்துக் களாகிவிடும்.

எனவே சமுதாயத்துக்கு ஏற் பட இருக்கும் இப் பெரு நஷ்டத் தைத் தவிர்ப்பதற்கு ஒவ்வொரு வரும் தம்மாலான முயற்சியும் நடவடிக்கையும் எடுப்பதுமுக்கிய மான் கடமை என்பதை அனைவ ருக்கும் நினைவூட்டுகிறோம். ஒவ் வொரு ஊரிலும் உள்ள முஸ்லிம் சங்கங்கள் போன்ற ஸ்தாபனங் களும் இவ்விஷயத்தில் அவசிய மான் அக்கறை காட்டவேண்டும்.

ஆங்காங்குள்ளமுதியவர்களைக் கேட்டால் வக்பு செய்யப் பட்டு ள்ள தர்ம ஸ்தாபனங்களைப் பற் றிய தகவல்களைத் தெரிந்து கொள்ளலாம். அவரவர்கள் தங் களுக்குத் தெரிந்த தகவல்களை. ஓரளவு உறுதி படுத்திக்கொண்டு விரிவாக எழுதி. **பதிவுத் தபால்** மூலம், மாநில வக்பு போர்டு, சென்னை-4, என்ற முகவரிக்கு அனுப்பலாம்.

இன்னும் வெகு சில நாட்களே எஞ்சியிருப்பதால் கால தாமத மின்றி நடவடிக்கை எடுக்க வேண்டுவது மிகமிக அவசியம் என்பதை மீண்டும் நினைவுறுத்து கிறோம்.

## வாழ்க மணமக்கள்!

பிரபல எழுத்தாளரும், சிங்கை "தமிழ் முரசு" நாளித ழின் துணையாசிரியரும், அருட் கவிஞர் ஜனுப் ஜே. எம். அபூபக்கர் (இபுனு ஜமாலுத்தீன்) ஜே. எம். ஹுஸைன் பி. ஏ. ('ஜே.யெம்') ஆகியோரின் இளவலுமான ஜனுப் ஜே. எம். சாலிஹ் எம். ஏ. அவர்களுக்கும் நீடூர் ஹாஜி ஜனுப் ஒய். ஏ. இனயத்துல்லா அவர்களின் புதல்வி நூருல் அய்ன் மணமகளுக்கும் 17—5—67 புதன்கிழமையன்று இரவாஞ்சேரி ஜும்ஆ மஸ்ஜிதில் திருமணம் சிறப்பாக நடந்தது.

நீடூர் ஹாஜி ஜனுப் ஒய். ஏ. இனயத்துல்லா அவர்களின் புதல்வர் ஜனுப் இ. அப்துல் வதூத் பி. ஏ. மணமகனுக்கும் ஜனுப் ஜே. எம். அபூபக்கர் (இபுனு ஜமாலுத்தீன்) அவர் களின் முதற் புதல்வி ஆமினு பீவி மணமகளுக்கும் அதே வேளையில் திருமணம் சிறப்பான முறையில் நடை பெற்றது.

**மணமக்கள் எல்லா நலன்களும் பெற்று நீடூழி வாழ எல்லாம் வல்ல அல்லாஹ் அருள்வானுக!**

**—'முஸ்லிம் முரசு' பணிமனைக் குழுவினர்.**

# விமரிசனம்

**இறை நம்பிக்கை**
**வாழ்வின் அடிப்படை**
**விலை ரூ. 1—25**

**இஸ்லாம் வகுக்கும்**
**வாழ்க்கை வழி**
**விலை ரூ 1—00**

*மூலம்: மௌலானா சையித்*
*அபுல் அஃலா மௌதூதி*
*தமிழ்: மௌலவி எஸ். அப்துல்*
*வஹ்ஹாப் (பாக்கவி)*

*வெளியிட்டோர் :*

**தமிழ் பதிப்பகம்**
*ஜமா அத்தே இஸ்லாமி (ஹிந்த்)*
*8, பேரர் தெரு, சென்னை-1*

## இறை நம்பிக்கை வாழ்வின் அடிப்படை

மௌலானா மௌதூதி அவர்கள் தலை சிறந்த இஸ்லாமிய அறிஞர். இஸ்லாமிய உலகு முழுதும் அவரை நன்கு அறிந்திருக்கிறது. அவருடைய கருத்துக்கள் அறிவு உலகில் அதிகம் பிரபல்யம் அடைந்து வருகின்றன. இறைமறை யுரைகளும் மாநபிமொழிகளும் அணுவளவும் தவறில்லாதவை. உலகில் எவருடைய வழிகாட்டுதலையும் இத்துணை உறுதியுடன் பின்பற்ற முடியாது, அவர் எவ்வளவுதான் பெரிய அறிஞராயிருந்தாலும் சரிதான், மறையுரையையும் நபி மொழியையும் எவ்வித ஐயத்திற்கும் இடமில்லாமல் பின்பற்ற வேண்டும். அப்படி பின்பற்றினல் வெற்றிகளுக்கு உரிமையாளர்களாய் நாம்தாம் இருப்போம். இன்று தோல்விகளில் துவளுகிறோமென்றால் அதற்குக் காரணம் மறையையும் நபி வழியையும் பின்பற்றாத பெரும் பிழைதான். இஸ்லாம் ஆயிரத்து நானூறு ஆண்டுகளுக்கு முன் பிறந்தது, அன்றைய சூழ்நிலை வேறு, இன்றைய சூழ்நிலைவேறு, அதனால் இஸ்லாத்தில் மாற்றம் தேவை என்பன போன்ற சிந்தனையும் செயலுமே முஸ்லிம்களின் முன்னேற்றத்தை முடமாக்கியவை. இஸ்லாம் அன்றைக்கும், இன்றைக்கும், என்றைக்கும் பொருத்தமானது. இஸ்லாம், அப்படி அப்படியே பின்பற்றப் பட்டபோது இணையில்லா வெற்றிகளை ஈட்டிக் கொடுத்தது; அப்படி பின்பற்றப் படாதபோது இழிவையும் அழிவையுமே எஞ்ச வைத்தது. இஸ்லாமியக் கொள்கைகள், கோட்பாடுகள் காலம் கருதி மாற்றப்படவோ தாட்சண்யம் கருதி தளர்த்தப்படவோ கூடாதவை. இத்தகைய கருத்து மௌலானா நூல்களின் மையம்.

“இறை நம்பிக்கை வாழ்வின் அடிப்படை, என்னும் இந்நூலும் மௌலானாவின் இவ்வித சிந்தனைப் பொறிகளுள் ஒன்று. இதில், ஒருவன் பிறப்பால் மட்டும் முஸ்லிமாகிவிட முடியாது, அவனிடம் இறை நம்பிக்கை இருந்தால்தான் முஸ்லிம், அந்த நம்பிக்கையின் அடிப்படையில் வாழ்ந்தால்தான் முஸ்லிம் என்று அழுத்தமாகக் கூறுகிறார். அவர் கொடுக்கும் அழுத்தம் நம் அறிவைக் கிளர்கிறது.

நாம் நம் எசமானுக்கு பயந்து, பணிந்து வாழ்கிறோம். அவன் இட்ட ஆணையை எவ்வளவு சிறப்பாகச் செய்ய முடியுமோ அவ்வளவு சிறப்பாகச் செய்ய விரும்புகிறோம், முயலுகிறோம். ஆனல் நம்மைப் படைத்து, பாலிக்கும் இறையாணையை ஏற்க மறுக்கிறோம், அவன் பணித்த கடனை

செய்யத் தவறுகிறோம். ஓர் அதிகாரியிடமிருந்து கடிதம் வந்தால் அதில் கூறப்பட்டிருப்பதை அறிய விரும்புகிமே், நமக்குத் தெரியாத மொழியில் அது எழுதப்பட்டிருந்தால் அதனை எடுத்துக்கொண்டு எவரிடமாவது ஓடுகிறோம். அதிலுள்ள விஷயத்தை அறிய அத்துணை ஆவல் படுகிறோம். அதனை நாம் தொலைவில் தூக்கி எறிந்து விடுவதில்லை. ஆனால் அல்லாஹ்விடமிருந்து நமக்கு வந்த கடிதத்தைப் படிக்கவோ, அதில் என்ன கூறப்பட்டிருக்கிறது என்பதை அறியவோ நாம் விரும்புவதுமில்லை, முயலுவதுமில்லை. இப்படி இடித்துக் கூறுகிறார் மௌலானா இந்நூலில்.

ஒரு முஸ்லிமின் நோக்கம் இறைவனின் திருப்திக்குத்தக்கபடி வாழ்வதாய்த்தான் இருக்கவேண்டும். இறை நம்பிக்கை நமக்குக் கற்றுத் தருவது இதுதான். நூலைப் படித்து வரும்போது நாம் கொண்டிருக்கும் இறை நம்பிக்கை எத்துணை பலவீனமானது என்பதை அறிகிறோம். சரியான இறை நம்பிக்கை பற்றி மௌலானா மிகவும் தெளிவாக விளக்குகிறார்கள். குழப்பமற்ற சிந்தனையாளரா யிருப்பதால் மௌலானாவின் விளக்கங்கள் மிகவும் தெளிவாயிருக்கின்றன. இறை நம்பிக்கையின் அவசியம் கொஞ்சம், கொஞ்சமாக உணரப்பட்டுவரும் இன்றைய உலகிற்கு இந் நூல் ஒரு சிறந்த அன்பளிப்பு எனலாம்.

## இஸ்லாம் வகுக்கும் வாழ்க்கை வழி

முஸ்லிம் என்றால் யார், ஒருவன் முஸ்லிமாயிருக்க வேண்டுமாயின் அவனிடம் குறைந்த பட்சம் என்ன விருக்கவேண்டும்? என்னும் வினாக்களுக்கு ,விளக்கம் என இந் நூலைக் குறிப்பிடலாம். முதலில் அவனிடம் இறை நம்பிக்கை இருக்கவேண்டும். இறை மறுப்பு இருக்கவே கூடாது. அவன் இஸ்லாம் வகுக்கும் நெறிமுறையைப் பின்பற்றுபவனாக இருக்கவேண்டும், இஸ்லாம் வெறுக்கும் முரண் வழியைப் பின்பற்றுபவனாக இருக்கக் கூடாது. அவன் இறைவன் ஒருவனுக்கே அடிமையாக இருக்க வேண்டும், வேறு எவருக்கும் அடிமையாக இருக்கக் கூடாது.

ஆனால் இன்று முஸ்லிம் என்று கூறிக் கொள்ளும் நாம் இறை மறையையும் பெருமானாரின் நடைமுறையையும் பின்பற்றுவதில்லை. ஆசாபாசங்களுக்கும், ஆசாரங்களுக்கும், மனிதனுக்கும் நாம் அடிமைப்பட்டுக் கிடக்கிறோம். நம் அழிவின் துவக்கம் இங்கிருந்துதான் ஆரம்பமாகிறது.

ஒரே இறையை நம்புவதாயும், ஒரே மறையைப் பின்பற்றுவதாயும் கூறிக் கொள்ளுகிறோம். ஆனால் நமக்குள் ஆயிரம் பிரிவுகள் இருக்கின்றன. நான் கூறுவதே சரி, நீ கூறுவது தவறு என்று சண்டை இட்டுக் கொள்ளுகிறோம். நம் துன்பத்திற்கு ஒரு முக்கிய காரணம் இது என்று மௌலானா மனம் வெதும்பிக் கூறுகிறார். "இந்தப் பாகுபாடுகளையெல்லாம் உடைத்தெறியுங்கள், ஒன்றுபடுங்கள்" என்னும் இறையாணையை அவர் எடுத்துக் காட்டுகிறார். அப்படி ஒன்றுபடவில்லையாயின் என்ன ஏற்படும் என்னும் இறைவன் எச்சரிக்கையையும் மௌலானா நினைவுபடுத்துகிறார். இறைவன் எச்சரிக்கிறான். "நீங்கள் அந்த நடைமுறையையும் உடைத்தல் வேண்டாம், மூடத்தனமான ஆசாரங்களையும் விட்டுவிட வேண்டாம். நாமும் உங்களைத் துண்டு, துண்டாகச் சிதறித்து

விடுவோம். உங்கள் எண்ணிக்கை அதிகமாயிருக்கிற நிலையிலும் உங்களைக் கேவலப்படுத்தி அவமானப் படுத்திக் காட்டுவோம்." இன்றைய நிலைமையைப் பார்க்கும்போது இறைவனின் அதே வாக்கு வேலை செய்து கொண்டிருப்பது போல்தான் தோன்றுகிறது. உலகில் முஸ்லிம்கள் எண்பது கோடியை எட்டிய நிலையிலும் அவர்கள் எங்கும் மகிழ்ச்சியாக இல்லை.

நாம் மட்டும் இறைவனின் சமுதாயமாக ஒன்றுபட்டால் கண்ணியமும் சிறப்பும் நம் காலடியில் வந்து வீழும் என்று மௌலானா அடித்துக் கூறுகிறார். மௌலானாவின் வேகமான உர்து நடைக்கு ஈடு கொடுக்க முயலுகிறது மௌலவி எஸ், அப்துல் வஹ்ஹாப் அவர்களின் தமிழ்.

இந்தத் தொடரில் இன்னும் மூன்று நூல்கள் வெளியிடப் போவதாய் அறிகிறோம். ஒரு நூலைப் படித்தவர்கள் அவசியம் அடுத்தடுத்த நூல்களைப் படிக்க ஆவல் கொள்ளுவது உறுதி. எனவே இந்நூல்களுக்கு சிபாரிசு அவசியமில்லை என்றே கருதுகிறேன்.

**—எம்.ஆர்.எம். முகம்மது முஸ்தபா**

## இபுனு ஜமாலுத்தீன் கவிதைகள்

வெளியீடு:

**ஜமால் பதிப்பகம்,**

ஜமால் மன்ஜில் இரவாஞ்சேரி

தஞ்சை மாவட்டம்

பக்கம்: 148—8 விலை: ரூ. 3-00

மனிதன் செய்யும் ஒவ்வொரு செயலுக்கும் பின்னே, அச்செயலைத் தூண்டும் ஓர் எண்ணம் இருக்கிறது. அந்த எண்ணம் உயர்வுடையதாக, தூய்மையுடையதாக, இருப்பின் செயலே ஓர் இலட்சியமாகி விடுகிறது. இதனால்தான் எம் பெருமானார் நாயகத் திருமேனி: "இன்னமல் அஃமாலு பிந்நிய்யாத்தி (மனிதன் செய்யும்) செயல்களெல்லாம்அவற்றுக்கு அடிப்படையாக அமைந்துள்ள நோக்கங்களைக் கொண்டே மதிப்பிடப்படும்" என்று மொழிந்துள்ளார்கள்.

கவிஞர் இபுனு ஜமாலுத்தீன் தம் நோக்கை மிகத் தெளிவாகக் கூறிவிடுகிறார்:

"கன்னல் வெல்லும்
தீந்தமிழில்
கவிசெய் திறையைப்
போற்றிடுவேன்"

கரும்பை மிகைக்கும் இனிய எந்தமிழில் கவிதை செய்து இறையைப் போற்றிடுவேன் என்று சொல்லும் பொழுதே அக் கவிதைக்கு ஓர் இலட்சியப் பிடிப்பு வந்து விடுகிறது.

இறையைப் போற்ற, இறைவன் புகழ் பாட, "நனிபுகழ் முஹம்மதரைத் தந்தருள் நாயகன் சீர் வியந்தேத்த" இக் கவிதைகள் பிறப்பு, எடுத்திருக்கின்றமையால், இவை வான் புகழ் கொண்டிருக்கின்றன என்பதை இத்தொகுப்புக்குக் கவிதையிலே சிறப்புரை வழங்கியுள்ள கவிஞர் மு. ரு. மு. அப்துர் ரஹீம் சுட்டிக் காண்பித்துள்ளார்:

கவிதை உணர்வை வணிகமெனும்
கனமா மதிலே தடுத்ததனால்
கவிதை உணர்வு அதில் முட்டிக்
ககன முகடு எட்டியதோ?

"நிழலிற் கனியென, நினைவிற் சுவை தரு" தம் பாடல்களை கவிஞர் இபுனு ஜமாலுத்தீன், (1) இறைவன் திருமுன் (2) அருளொளி பாரீர் (3) பல் சுவை (4) நாயகனே! என்னும் நான்கு தலைப்புக்களில் தொகுத்துஅளித்

துள்ளார். எல்லாப் பாடல்களி லும் ஓர் அழகு, ஓர் அமைதி காணப்படுகின்றது. அது தான் இறையுணர்வு.

'நினைந்திடில் சிந்தைக் கின்பம் நவின்றிடில் நாவுக் கின்பம், புனைந் திடில் கவிதைக் கின்பம்' என்று இறையருள் இன்பத்தில் கவிஞர் நீந்தித் திளைக்கும் போது, அந் நீர்த் திவலைகள் நம் மீதும் தெறிக் கின்றன; அந்த ஈரத்தில் நம் இத யமும் குளிர்ச்சி பெறுகின்றது-பண்படுகின்றது'

நபிகள் பெருமானார் மீது நல்ல றக் கவிஞர்கள் கொண்டுள்ள காதல் ஹலரத் கஅப் இப்னு ஜுஹைர் (ரலி), ஹலரத் ஹஸ் ஸான் இப்னு தாபித் (ரலி) இமாம் பூஸிரி (ரஹ்) முதலிய பண்டையக் கவிச்செல்வர்களிலிருந்து உமறுப் புலவர் அல்லாமா இக்பால், கவி யேறு காதிர் முஹைய்யதீன் மரைக்காயர், கவிஞர் கா. அப் துல் கபூர் ஆகிய இற்றை நாள் கவிமணிகள் ஈருகச் சொந்தம் கொண்டாடும் ஓர் இலக்கியப் பாரம்பர்யம்; இதில் தமக்கும் கணிசமான பங்கு உண்டென் பதை, பெருமானார் மீது இசைத் துள்ள பல இனிய கவிதைகள் மூலம் கவிஞர் இபுனு ஜமாலுத் தீன் நிரூபித்துள்ளார்.

ஓசை நயத்துடன் பாடுவதற் கேற்ற சந்தமும், இசை நுட்பமும் கொண்டவை இக்கவிதைகள். குறிப்பாக, "அண்ணல் முஹம்ம தின் நாமமே-என் அகவிருல் ஓட் டிடும் தாரகம்" எனத் துவங்கும் பாடலை இசை முரசு இ. எம். ஹனீபா அவர்கள் பாடிய போது உள்ளம் நெகிழ அதைக் கேட்டுக் கொண்டிருந்தது இன்னும் என் நினைவில் பசுமையாக இருக்கிறது

எண்பதுக்கு மேற்பட்ட எழி லார் கவிதைகளைக் கொண்ட இத்தொகுப்புக்கு இச்சிறு விமர் சனம் நிறைவான மதிப்பீடா காது; விரித்தெழுத இட மின்மை யால் இக்காவியப் படையலின் பல்வேறு சிறப்புக்களை வாசகர் களே ரசித்து அனுபவிக்க விட்டு விட வேண்டியதுதான்!

"மனிதம். புனிதம் – இரண்டும் இக்கவிதைகளின் அடிநாதம்" என்னும் அடிப்படையோடு ஆராய்ச்சி மிக்க ஒரு முன்னுரை வழங்கியிருக்கின்ருர் சிங்கை "தமிழ் முரசு" நாளிதழின் துணை யாசிரியர், ஜனாப் ஜே. எம். சாலிஹ் எம். ஏ. முன்னுரையில் "மனிதன் இறைவனின் குழந்தை" என வரும் கூற்றை, "மனிதன் இறைவன்னி படைப்பு" என் னும் கருத்தில்தான் கொள்ள வேண்டும். இறைவன் தான் பெறு வதுமில்லை, பெறப்படுவதுமில் லையே! (லம் யலித் வ லம் யூலத்.)

சிறப்பாக அமைக்கப் பெற் றுள்ள, அச்சிடப் பெற்றுள்ள இக்கவிதைத் தொகுப்பு, "தமி ழோர்ந்த மக்களுடைக் கரத்தி லெல்லாம்......தங்கிட," கவிஞர் மதிதாசனுடன் நாமும் வேண்டு கிறோம். —**எம். அப்துல வஹ்ஹாப்**




# கடைசி ஊர்வலம்

## ஆளுர் ஜலால்

**வே**கமாகச் சென்று கொண்டிருந்த வாகனங்களின் பேரிரைச்சலால், அமைதி இழந்து கொண்டிருந்தது, பரந்து கிடந்த அந்தப் பெருஞ்சாலை. பாதரட்சையின்றி சாலையினை மிதிப்பவர்களை துடிக்க வைக்குமளவிற்கு, சித்திரை மாதத்து வெயில், தன் கடமையைச் செய்து கொண்டிருந்தது அனல்பறக்கும் அந்தக் கடுமையான வெயிலில் நடந்துவந்து கொண்டிருந்த அப்துல்லாவின் காதுகளுக்கு வானொலியின் அறிவிப்பு ஒலி தெளிவாகக் கேட்டது

“இப்போது நேரம் சரியாக ஒருமணி பதினைந்து நிமிடம்” அவரது நடையில், முன்னைவிடவேகம் அதிகரித்தது. அவரது ஊரின் வழியாகச் செல்லும் பஸ் புறப்படுவதற்கு இன்னும் இருபத்தைந்து நிமிடங்களேதான் இருந்தன. அந்த ஒரே பஸ்ஸையும் அவர் தவறவிட்டால், சுமார் ஒன்றரை மைல் தூரம் அவர் கால்நடையாகச் செல்ல நேரிட்டு விடும். எனவேதான் அவர் வேகமாக ‘பஸ்ஸ்டாண்டை’ நோக்கி நடைபோட்டார்.

வடிந்து கொண்டிருந்த வியர்வையைக்கூட துடைத்துக்கொள்ளாமல், துரிதமாக வந்து கொண்டிருந்த, அப்துல்லாவை ஏற்றிச் செல்வதற்காகவே காத்து நிற்பதைப்போல, அங்கே எட்டாம் நம்பர் பஸ் நின்று கொண்டிருந்தது. சலனமற்று, அமைதியாக ஓடிக்கொண்டிருக்கும் ஆற்றைப் போல், வளைந்திருந்த நீண்ட கியூ வரிசையில் நின்று டிக்கெட்டைப் பெற்றுக்கொண்டு, அவரது ஊருக்குச் செல்லும், குறிப்பிட்ட அந்த எட்டாம் நம்பர் பஸ்ஸில் ஏறி அமர்ந்தார், அப்துல்லா.

நிற்பதற்குக்கூட இடமில்லாத அளவுக்கு, மக்கள் தொகையை நிரப்பிக்கொண்டு, நிறைமாதக் கர்ப்பிணியைப்போல மெதுவாக

அசைய ஆரம்பித்த அந்த பஸ் சுமார் ஐந்தரை மைல் தூரத்தி லிருந்த அப்துல்லாவின் ஊரை, அரைமணி நேரத்திற்குப் பிறகு சென்றடைந்து அவரை இறக்கி விட்டுத் தன்வழியே சென்றது. பஸ்ஸை விட்டுக் கீழே இறங்கி, ஒரு சில அடி தூரங்களைக் கடந்த பின், சின்னஞ்சிறிய ஒரு ஓலைக் குடிலினுள் நுழைந்தார் அப்ல்லா. சுருக்கம் விழுந்திருந்த,தன் கன்னங்களில் பதிந்திருந்த வியர் வை முத்துக்களை, மேல்துண்டால் ஒற்றிக்கொண்டார்.

"போன காரியம் என்ன ஆச் சுங்க?" என்று கேட்டபடியே ஆவலோடு வந்தாள், அவரது மனைவி ஹலீமா. அவளது கேள் விக்கு பதில் எதுவும் கூருமல், பக்கத்தில் கிடந்த நார்க்கட்டி லின் மீது மௌனமாக அமர்ந் தார் அப்துல்லா.

"என்னங்க! பேசாம இருக் கீங்க?"

"நான் பேசமுடியாதஅளவிலே என்னை உன் அண்ணன் ஆக்கி வச்சிட்டார்.'

"உங்களைப் பேசமுடியாத அள விலே அவர் என்னதான்சொல்லி விட்டார்? கொஞ்சம் விளக்கமாத் தான் சொல்லுங்களேன்."

"உலகத்திலேயுள்ள அறிஞர் களுக்குக்கூடத் தெரிந்திராத, ஒருபுதுமையான தத்துவத்தை உன்அண்ணன் காசிம்எங்கிட்டே சொன்ஞர் அந்த தத்துவத்தால், நான் மட்டுமல்ல நீயும்கூடத்தான் வருத்தப்படப் போகிருய்."

"அந்த அளவுக்கு அவர் என்ன தான் பேசிவிட்டார்?"

"அண்ணன் தம்பி, அக்கா தங் கச்சி என்கிற பந்தம் பாசமெல் லாம் ஒரு குறிப்பிட்ட நாள்வரை யிலும்தாளும். அதாவது, ஒவ் வொருத்தரும் கலியாணம் கட்டி கிட்ட பிறகு, அந்தப் பாசத்தை யெல்லாம் அழித்துவிட வேண் டுமாம். கணவன் மனைவியிடமும், மனைவி, கணவனிடமும் தான் பாசங்களைப் பகிர்ந்துகொள்ள வேண்டுமேதவிர அதற்குப் பிறகு அண்ணன், தம்பீங்கிற யாரை யுமே நேசிக்கக்கூடாதாம். உன் அண்ணனின் அருமையான தத்து வம் எப்படி?"

"...ம்...வேறு என்ன சொன் ஞர்?"

"உங்க ஊரிலே ஏதாவது மாப் பிள்ளை கிடைச்சா, ஆமினவைக் கட்டிக் கொடுங்க. அப்படி மாப் பிள்ளை கிடைக்கலேன்ன, வீட்டா டையே அவளை வச்சுக்கிடுங்க தயவு செய்து என் மகனை மட்டும் அவளுக்குக் கணவனுகக்கேட்கா தீங்க. என்று முகத்தில் அறைஞ் சாப்போல பேசிவிட்டார் உன் அருமை அண்ணன்"

"என்ன? அண்ணை அப்படி சொன்ஞர்?'

"அன்புமகள் ஆமினவை, எந்த அண்ணன் மகனுக்குக் கொடுக்க லாமென்று நீ நினைத்திருந்தா யோ அதே அண்ணன்தான் அப் படிச் சொன்ஞர். ஆனல் உருவத் தில்தான் அவர் உன் அண்ணை கத் தெரிகிருரே தவிர, அவரு டைய உள்ளத்தில், பாசம் என் கிற அன்பிற்குக் கொஞ்சமேனும் இடம்கிடையாது. சிறிய பெட்டிக் கடை வச்சு, அதிலிருந்து வார சம்பாத்தியத்தைக்கொண்டு, குடும்பம் நடத்திக்கிட்டிருந்த போது இருந்த உன் அண்ணனுக் கும், இப்போ 'காசிம் ஸ்டோர்' என்கிற பெரிய கடைக்கு முதலா ளியாக இருந்து கொண்டிருக்கிற உன் அண்ணனுக்கும், எத்தனை

மாறுபாடு. எல்லாம் அல்லாவின் செயல்! அவன் எப்படி நாடியிருக்கிருனே அப்படியே நடக்கட்டும்'' என்று கூறிவிட்டு, பக்கத்தில் நின்று கெண்டிருந்த ஆமினவை கனிவோடு நோக்கினர் அப்துல்லா.

கனிந்த மாம்பழத்தின் நிறமும் வண்ணமயிலின் தோகை போன்று, நீண்டு வளர்ந்திருந்த கூந்தலும் கொண்டிருந்த ஆமினவின் உள்ளம், சின்னஞ்சிறு பச்சிளங் குழந்தையின் பிஞ்சு உள்ளத்தினைப்போல, களங்கமற்றிருந்தது. உருண்டு திரண்டிருந்த அவளது உடற்கட்டும், வட்ட நிலவைப் போன்ற, அவளது மதிமுகமும், அவளுடைய அழகை பன்மடங்சாகக் காட்டியது. பூரணமான அழகை அவளுக்குக் கொடுத்த இறைவன், அவளுக்கு ஒரு மாபெரும் குறையையும் வைத்து விட்டான். மற்றவர்களோடு, அன்பாகபேசி, இன்பமாகப் பழகவேண்டிய அந்த ஆமினவை, ஒரு ஊமையாகப் பிறக்கச் செய்துவிட்டான் ஆண்டவன். அவளுக்கு அவன் அளித்த ஒரே குறை அந்த ஒன்றுதான். அது அவளுடைய வாழ்வையே வறண்டதாக்கிவிட்டது.



ஊமையாகப் பிறந்துவிட்ட, தங்கள் அன்புமகள் ஆமினவின் வருங்கால வாழ்வு, இன்பம் பூத்துக் குலுங்கும், வனப்புமிக்க, வளம் கொழிக்கும் நல்வாழ்வாகத்தான் இருக்கும் என்றுதான் நேற்று வரையிலும் பூரணமாக நம்பிக் கொண்டிருந்தார்கள் அப்துல்லாவும், ஹலீமாவும். தன் மகளை ஏற்றுக் கொள்வதற்கென்றே பிறந்து வளர்ந்திருக்கும், தன் அண்ணன் மகன் ஹபீப், நிச்சயமாக ஆமினவுக்கு நல் வாழ்வு அளிப்பான், என்றுதான், அன்று வரைக்கும்கூட அவர்கள் மனப்பூர்வமாக நம்பியிருந்தார்கள். ஆனல் அவர்களது நம்பிக்கைப் பாலம், இன்று உடைத்தெறியப் பட்டு விட்டது. அவர்களது எண்ணமெல்லாம் கானல் நீரைப் போல் திடிரென மறைந்து விட்டது. அவர்களது அன்பு மகள் ஆமினவின், வருங்கால வாழ்வு வறண்ட பாலைவனமாகிவிட்டது. அதற்குக் காரணம் ஹலீமாவின் அண்ணன் காசிம்தான்.

பதினைந்துவருடங்களுக்கு முன்னல்—

காசிம் ஒரு நடுத்தரக் குடும்பத்தினராக வாழ்ந்து வந்தபோது அவருக்கிருந்த ஒரு சின்ன வெற்றிலைபாக்குக் கடைதான், அவருடைய குடும்பத்திற்கு வேண்டிய செலவுக்கு வருமானம் கொடுத்துக்கொண்டிருந்தது. அவருக்குப் பிறந்திருந்த ஒரே மகன் ஹபீப், இரண்டாம் வகுப்பில் படித்துக் கொண்டிருந்தான். அப்போதெல்லாம் ஹபீபையும் கூட்டிக்கொண்டு அடிக்கடி ஹலீமாவின் வீட்டிற்கு வந்து கொண்டிருப்பார், காசிம். தன் கூடப்பிறந்த தங்கை ஹலீமாவை

## வாக்காளர் பட்டியலில் பெயரில்லாதவர்!

டாக்டர் ஜாக்கிர் ஹுசைன் டில்லி நகரசபைத் தேர்தலுக்கு ஒருமுறை போட்டியிட்டார் தமது அபேட்சை மனுவில் தம் பெயரை 'ஜாக்கிர் ஹுசைன்' என எழுதியிருந்தார். ஆனால் வாக்காளர் பட்டியலில் 'ஜாக்கிர் ஹுசைன் கான்' என்றிருந்ததது. தேர்தல் அதிகாரி இந்தக் காரணத்துக்காக மனுவைத் தள்ளுபடி செய்தார். முன்பு டில்லி மாநகரின் மேயராக இருந்த வழக்கறிஞர் நூருத்தீன், டாக்டர் ஹுசைனுக்காகவாதாடினார். 1957-ல் பாராளுமன்ற தேர்தலுக்கு ஜாக்கிர் ஹுசைனை நிறுத்த காங்கிரஸ் மேலிடம் முடிவுசெய்தது. ஆனால், அவர் பெயரோ வாக்காளர் பட்டியலில் காணப்படாததால் இது சாத்தியமாகவில்லை. அப்பால் ராஜ்ய சபாவுக்கு ஓர் அங்கத்தினராக நியமனம் செய்யப்பட்டு பிறகு உப ஜனாதிபதியாக. தேர்ந்தெடுக்கப்பட்ட டாக்டர் ஹுசைன் அவர்களே இன்று பெரும்பாலான வாக்குகள் மூலம் ஜனாதிபதியாக தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார்.

"கேஸ்ரீ"

வாரத்திற்கு ஒரு தடவையாவது வந்து பார்த்தால்தான் அவருக்கு நிம்மதியாகஇருக்கும். அந்த அளவுக்கு அவள்மீது பற்று பாசமெல்லாம் வைத்திருந்தார் காசிம்.

இந்நிலையில்தான் ஒருநாள், ஹலீமா குழந்தை பெற்றாள். தன் தங்கச்சிக்கு குழந்தை பிறந்திருக்கிறதென்ற செய்திகேட்டு, ஆவலோடு வந்தார் காசிம். குழந்தையைப் பார்த்துவிட்டு, அவருக்கு ஏற்பட்ட சந்தோஷம், அப்பப்பா! கரைகாணமுடியாத கடலைப் போன்று விரிந்த மகிழ்ச்சி அவருக்கு. நாள் தவறாமல் குழந்தையைப் பார்த்துச்சென்று கொண்டிருந்தார் காசிம். வருடம் இரண்டு கடந்தபின்தான், அந்தக் குழந்தை ஒரு ஊமை என்பதை காசிமும்,அக் குழந்தையின் தாய்தந்தையர்களும்நிச்சயமாகப் புரிந்துகொண்டார்கள். தனக்கு ஒரு ஊமைக் குழந்தையை இறைவன் தந்துவிட்டானே என்று அப்துல்லாவும்,ஹலீமாவும் மனம் நொந்தனர்.

"ஏன் தங்கச்சி வருத்தப் படறே? உன்மகளைத் திருமணம் முடிப்பதற்காக என்றே என் மகன் ஹபீப் இருக்கிறானே. அவளுக்கு வளமுள்ள வாழ்வுகொடுக்கத் தகுதியான என் மகன் ஹபீப் இருக்கும்போது எதற்காக நீ கவலைப்படுகிறாய்? உன் அன்பு மகளுக்கு, நீண்ட ஆயுளை இறைவன் கொடுத்தால் அதுவே போதும்" என்று அன்பான வார்த்தைகளைக்கூறி, அப்துல்லாவையும், ஹலீமாவையும் ஆறுதல் படுத்தினார் காசிம்.

ஆனால் இன்று—

காசிம் ஒரு பெரும் பணக்காரர் மட்டுமல்ல,ஒருமுதலாளியும்கூட. அவரது மகன் ஹபீப், காலேஜில் படித்துக் கொண்டிருக்கிறான். இப்போது அவருக்கு தங்கச்சி

ஹலீமா என்று ஒருத்தி இருக்கிருள் என்று கூட நினைவு இல்லை. அதை நினைவுபடுத்துவதற்காகத் தானே என்னவோ, அப்துல்லாவை இறைவன் அங்கே அனுப்பிவைத்தான். ஆனால் காசிம், நடந்துகொண்ட முறை அப்துல்லாவை மட்டுமல்ல, அவரைப் போன்ற மனித உள்ளம் படைத்த யாரையுமே கண்ணீர் வடிக்கத்தான் செய்யும். அந்த அளவுக்கு காசிமின் பண்பு, தலைகீழாக மாறிவிட்டது. இன்று அவர் பணத்திற்காக எதையும் செய்யக்கூடிய, பணப்பித்தராகிவிட்டார். அவருக்கு இப்போது இருக்கும் ஒரே நோக்கமெல்லாம், தன் மகன் ஹபீபை, தன்னைவிடப் பணக்காரரான ஒருவருடைய மகளுக்குத்தான் கொடுக்க வேண்டும்என்பதே. பொதுவாக இது பணக்காரராக உள்ள ஒவ்வொருவருக்கும்" இருக்கும் நோக்கம்தான். அப்படியிருக்கும்போது ஏழையான தன் சகோதரியின் மகளுக்கு, அதுவும் ஒரு ஊமைப் பெண்ணுக்கு, மகனைக்கொடுக்க அவருக்கு எப்படி மனம்வரும்? எனவேதான் அவர், ஹலீமாவைக்கூட மறந்துவிட விரும்பினர்.

''ஆமினவை மருமகளாக ஏற்றுக்கொள்கிறேன்'' என்று உறுதி கூறியிருந்த காசிமே, அவளை மருமகளாக்கிக்கொள்ள மறுத்துவிட்டபோது, இனி யார்தான் அவளை மருமகளாக ஏற்றுக் கொள்ளப் போகிருர்களோ?

இரண்டாண்டுகள் கடந்துவிட்டன:

பச்சிளங் குழந்தையின் கள்ள

மற்ற உள்ளத்தைப்போல, தூய்மையாக வானத்தில் ஒளி வீசிக்கொண்டிருந்தது பூரணச் சந்திரன். எங்கோ ஒரு வீட்டில், மணி பன்னிரண்டு அடிக்கும் சப்தம், காற்றில் மிதந்து வந்துகொண்டிருந்தது. ஊரே உறக்கத்தில் ஆழ்ந்திருந்த அந்த நள்ளிரவில் அப்துல்லாவின் சின்னஞ்சிறிய வீட்டினுள்ளிருந்து, ஆமினுவின் அழுகைக் குரல், வெளிவந்துகொண்டிருந்தது. வேதனை தாங்க முடியாமல், அலறித் துடித்துக்கொண்டிருந்த ஆமினுவின் அழுகைக் குரலால் பக்கத்தில் படுத்திருந்த அப்துல்லாவும், ஹலீமாவும் திடுக்கிட்டு எழுந்தார்கள். மங்கிய ஒளியைப் பரப்பிக்கொண்டிருந்த மண்ணெண்ணெய் விளக்கைத் தூண்டிவிட்டு, மகளுக்குப் பக்கத்தில் ஓடோடி வந்தாள் ஹலீமா.

“உடம்புக்கு என்னம்மா செய்கிறது?” என்று படபடக்கும் நெஞ்சத்தோடு, கேட்டபடியே நின்று கொண்டிருந்தார் அப்துல்லா.

பாவம்! பேசமுடியாத ஊமை ஆமினுவால் அவர்களுக்குப் பதில் சொல்லத் திறமையில்லை. நெஞ்சைப் பலமாக, அழுத்திப் பிடித்துக்கெண்டே அழுது புரண்டு கொண்டிருந்தாள் ஆமினு.

மகள் படும் வேதனையை இனியும் பார்த்துக்கொண்டு நிற்க அப்துல்லாவுக்கு மனம் வரவில்லை. துண்டை உதறித் தோளில் போட்டுக் கொண்டு, கதவைத் திறந்து வெளியே வந்தார். நன்றியுள்ளம் படைத்திருந்த பிராணி ஒன்று, வெளியே நின்று குரைத்துக் கொண்டு நின்றது. அவர் எதையுமே கவனிக்காதவராக, பக்கத்தில் இருந்த டாக்டர் வீட்டை நோக்கி நடைபோட்டுக் கொண்டிருந்தார். நீண்ட பெருமூச்சு ஒன்று, அவரது உள்ளத்தின் தாழ்வாரத்திலிருந்து

நிதானமாக வெளிக்கிளம்பியது. டாக்டர் மூர்த்தியின் வீட்டுக் கதவை பலமாகத் தட்டினார் அப்துல்லா.

"யாரைய்யா அது?"

அலட்டிக்கொண்டே வந்து கதவைத் திறந்தார் டாக்டர்.

"என்னய்யா விஷயம்?"

"என்மகளுக்கு, உடம்பு சரியில்லே. அவள் ரொம்பவும் வேதனையால் துடித்துக் கொண்டிருக்கிருள். தயவு செய்து கொஞ்சம் வந்து பார்த்திட்டுப் போங்க சார்.' கெஞ்சினர் அப்துல்லா.

இரக்க உள்ளம் படைத்த அந்த டாக்டர் மேற்கொண்டு எதுவுமே பேசாதவராக அப்துல்லாவின் பின்னல் நடந்து கொண்டிருந்தார்.

அப்துல்லாவின் வீட்டு முன்னல், அக்கம்பக்கத்திலுள்ளவர்களெல்லாம் கூடி நின்றுகொண்டிருந்தனர். ஹலீமாவின் பயங்கரமான அழுகைக்குரல், அந்த மயான அமைதியில் எதிரொலி கிளப்பிக்கொண்டிருந்தது. கூட்டத்தினரை விலக்கிக் கொண்டு வீட்டினுள் நுழைந்தார் அப்துல்லா.

அடுத்தகணம் "ஆமினு!" என்று அலறியபடியே, கீழே சாய்ந்தார்.

அவரது குரலுக்கு ஆமினுபதில் கூறவில்லே. பிறந்து வளர்ந்து ஒரு வார்த்தைகூடப் பேசியறியாத அந்த அபூர்வப் பிறவியின் கண்கள் விண்ணகத்தை நோக்கி நிலேயாக நின்றன. இதயமென்னும் இயந்திரம் தனது வேலேயை நிறுத்தி, ஓய்வு எடுத்துக்கொண்டது. ஆம்! நிம்மதியான மறுவுலக வாழ்வைப் பெற்றுவிட்ட நிம்மதியில் மீளாத்துயில் புரிந்துகொண்டிருந்தாள் அப்துல்லாவின் அன்பு மகள் ஆமினு. வெள்ளேத் துணியினுல், அவளது சடலம் மூடப்பட்டது. ஆமினு என்ற பெயர்கொண்ட அவள் இப்போது 'மையித்' என்ற புதிய பெயரைப் பெற்றுவிட்டாள். அந்தப் பெயரை எல்லோருமே, வாழ்வின் கடைசி நாளில் பெற்றுத்தான் தீருவார்கள்.

மையித்திற்கு வேண்டிய ஏற்பாடுகள் துரிதமாக நடைபெற்றுக் கொண்டிருந்தன. ஆமினுவின் மையித்தைக் காணவேண்டுமென்று வேகமாக வந்துகொண்டிருந்த இளஞ்சூரியனின் பொன்னிறக் கதிர்கள், பிரிந்து கிடந்த ஓலேயின் இடுக்கு வழியாக ஊடுருவி, ஆமினுவின் சடலத்தின் மேல் ஒளிபரப்பியது.

காலே மணி ஒன்பது. மையித்தை அடக்கம் செய்வதற்குரிய ஏற்பாடுகள் முடியும் தருவாயில் இருந்தன. சந்தூக்குப்பெட்டி, முற்றத்தில் கொண்டுவந்து வைக்கப்பட்டது.

என்றும் போல், அந்த ஊருக்கு வந்துகொண்டிருந்த பஸ்ஸிலிருந்து காசிம் கீழே இறங்கினர். நேராக அப்துல்லாவின் வீட்டை நோக்கி நடைபோட்டுக்கொண்டிருந்தார். காசிமுக்கு நன்கு பழக்கமான இன்னெருவர், அவரை வழியிலேயே சந்தித்தார்

"என்னப்பா காசிம்! மையத்து வீட்டுக்காபோறே." என்று அமைதியாகக் கேட்டார் காசிமின் அருமை நண்பர் ஆரிப்.

"மையத்து வீடா? யார் வீட்டைப்பற்றி நீ சொல்கிருய்?"

"உன் தங்கச்சியோட வீட்டைத் தான்பா சொல்றேன். ஒண்ணும் புரியாததுமாதிரி கேட்கிறியே. அப்படீண்ணா, ஆமினா மௌத்தான விஷயமே உனக்குத் தெரியாதா?"

"ஆமினா மௌத்தாகி விட்டாளா?" புரியாமல் கேட்டார்காசிம். அதற்கு ஆரிப் பதில் கூறுவதற்கு முன்பாகவே, காசிம் தொடர்ந்தார்.

"...என் மருமகள் ஆமினா இறந்துவிட்டாளா? யா அல்லாஹ்! இத்தகைய ஒரு பெரும் சோதனையை எனக்கு ஏன் அளித்தாய் இறைவா! என் அன்பு மகனுக்கென்றிருந்த ஒரே பெண்ணையும் நீ பறித்து விட்டாயே"

"காசிம்! - நீ என்னப்பா சொல்றே. உன்மகனை, ஆமினாவுக்குக் கட்டிக்கொடுக்க மாட்டேன் என்றல்லவா அப்துல்லாவிடம் கூறினாய். இப்போ ஏன் அவனை, அவளுக்குக்கட்டிக்கொடுக்க முன் வந்தாய்?" அப்துல்லாவின் வீட்டு விஷயங்களைப்பற்றி, நன்கு அறிந்த ஆரிப் விடாமல் கேள்வி யெழுப்பினார்.

"ஆம்! நான்மறுத்தேன்! உண்மைதான். நான் ஒரு பணக்காரன்

என்ற இறுமாப்பில் எதையெல்லாமோ பேசிவிட்டேன். அல்லாவை மறந்து, என்னால் எதையுமே செய்ய முடியும் என்ற கீழ்த் தரமான எண்ணத்திற்கு நான் அடிமையாக இருந்ததால் அன்று அப்துல்லாவிடம் கடுமையாகப் பேசிவிட்டேன். என் மகனை, என்னைவிடப் பணக்காரரான ஒருவருடைய மகளுக்குத் தான் கொடுக்க வேண்டுமென்று பேராவல் கொண்டிருந்தேன். ஆனால் இன்று அவன், என் மருமகள் ஆமினாவைக்கூட மனைவியாகப் பெறமுடியாத அளவுக்கு ஆகிவிட்டான்.''

''ஏன்? என்ன உன் மகனுக்கு?''

''காலேஜிலுள்ள பரிசோதனைச் சாலையிலே, ஏதோ பரிசோதனை செய்து கொண்டிருந்த போது என் மகன் ஹபீபின் முகத்திலே திராவகம் கொட்டிவிட்டது. ஒளி மிக்க தன் கண்களை இழந்த அவனுடைய முகத்தோற்றம் அலங்கோலமாக மாறிவிட்டது. அந்தத் திராவகம் அவனது கண்களை மட்டுமல்ல, ஒளிமிகுந்த அவனது எதிர்கால வாழ்வையே இருளாக்கிவிட்டது. அவனுக்குப் பெண்கொடுக்க, சாதாரண ஏழை கூட முன்வராதிருக்கும் நிலையில் தான் ஆமினாவையாவது திருமணம் செய்து வைத்துவிடலாம் என்று எண்ணி வந்தேன். ஆனால் ...அந்த ஆமினாவும்...'' அதற்கு மேல் அவரால் பேசமுடியவில்லை அப்படியே நின்றுவிட்டார்.

''ஆமினாவை உன்னால் மருமகளாக்கிக் கொள்ள முடியவில்லையென்றாலும், தூய்மையான மறு உலகை நோக்கிப் பயணம் செல்லுகின்ற அந்த ஆமினாவின் கடைசி ஊர்வலத்திலாவது கலந்து கொள்! வாப்பா! வா!!''

கால்கள் தள்ளாட, மைபித்து வீட்டை நோக்கி சென்று கொண்டிருந்தார் காசிம். சந்தூக்குப் பெட்டி கபுறுஸ்தானை நோக்கிப் புறப்பட்டது. கலிமாவின் வாசகங்கள், பேரொலியாய் எழுந்தன. நித்தியமான உலகை அடைந்துவிட்ட, அந்த உத்தமி ஆமினாவின் ஜனாஸாவை அடக்கம் செய்யச் சென்று கொண்டிருந்த கடைசி ஊர்வலத்தில், காசிமும் ஒருவராக, கபுறுஸ்தானை நோக்கிச் சென்று கொண்டிருந்தார்.

  

# திருக்குர்ஆன் தெளிவுரை

## 98. விரயமும் உலோபமும்!

"அவர்கள், செலவு செய்யும்போது, அளவு கடந்துவிட மாட்டார்கள் உலோபித்தனமும் செய்ய மாட்டர்கள். அவ்விரண்டிற்கு மிடையே நடுத்தர மான வழியைக் கடைப் பிடிப்பார்கள்" (25:67)

திருமறையின் "அல்புர்கான்" என்னும் 25-ஆம் அத்தியாயத் தின் கடைசிப் பிரிவில் இறைவ னின் நல்லடியார்கள் எப்படிப் பட்டவர்களாக இருப்பார்கள், இருத்தல் வேண்டும் என்று வர் ணிக்கும் பகுதியில் கூறப் பெற் றுள்ள திருவசனங்களுள் ஒன்ரு கும் இது.

உணவு, உடை, அழகு, அந் தஸ்து மனைவி, மக்கள் ஆகிய வைகளைப் போலவே செல்வமும் இறைவனல் மனிதனுக்கு அளிக் கப்படும் அருட் கொடைகளுள் ஒன்ருகும். அல்லாஹ்அருளியதை அவனுடைய கட்டளைகளுக்கும் திருப்பொருத்தத்திற்கும் இனங் கப் பயன் படுத்துவதே மனித னின் கடமை.

பொருளைப் பெற்றவர்களுள் சிலர் அளவுகடந்து செலவு செய்து செல்வத்தை விரயமாக்கி இறுதியில் சீரழிகிருர்கள். உணவு, உடை, இருப்பிடம், சடங் குகள் ஆகியவற்றிற்காக ஆடம்பர மான முறையில் செலவிடுவோர் உண்டு, சமுதாயத்துக்கும், நாட் டுக்கும், அத்தகைய மனிதர்கள் தமக்குமே கேடு விளைவிக்கக் கூடிய நடத்தை அது. அவர்களைப் போன்ரேரினுல்தான் நாடுகளில் "பணவீக்கம்" ஏற்படுகிறது. அதன் விளைவு, குறைந்த வருவா யுடையவர்களுக்கு மேலும்மேலும் துன்பம் ஏற்படுதல்.

இன்னுமொரு சாரார் இறை வன் அவர்களுக்கு அளிக்கும் செல் வத்தை தமக்காகவும்கூட தேவை யான அளவும் செலவு செய்யா மல், பிறருக்கும் உதவாமல் சேமித்துப் பாதுகாத்து வைத்து இவ்வுலகத்தை விட்டுப் பிரியும் போதும் அதே நினைவாக உயிர் துறப்பவர்கள். அத்தகைய செல் வம் பெரும்பாலும் அவர்களு டைய வாரிசுகளால் விரயமாக்கப் படுவதுண்டு. செல்வத்தை முட க்கிவைத்து சமுதாயத்துக்குப் பயன்படாமல் செய்வதையும் தடை செய்துள்ளது இஸ்லாம்.

"ஆன முதலில் அதிகம் செலவானால், மானம் அழிந்து, மதி கெட்டுப், போன திசை எல்லார்க்கும் கள்ளனாய்,......தீயனாய், நல்லார்க்கும் பொல்லானாய்" என்னும் முதுமொழிக்கும், –

"பாடு பட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்து வைக்கும் கேடு கெட்ட மானிடரே, கேளுங்கள், கூடுவிட்டு இங்கு, ஆவிதான் போயினபின் ஆரே அனுபவிப்பார், பாவிகாள் அந்தப் பணம்?" என்னும் வாக்கிற்கும் ஆளாகாமல் இரண்டிற்கும் நடுத்தரமான வழியை மேற்கொண்டு ஒழுகுவதே நேர்மையான வழி என்று போதிக்கிறது, திருமறையின் இவ்வரிய வசனம்.

யாவரும் ஏற்றுக் கொள்ளத் தக்க ஓர் அரிய பொருளாதாரத் தத்துவத்தை இவ்வசனம் வழங்குகிறது.

# நாச்சியார்கோவில்

# அரபி மத்ரஸா கட்டிட நிதி

**அன்புடையீர் !** அஸ்ஸலாமு அலைக்கும்

இவ்வூர் பள்ளிவாசல் நிர்வாகத்திலுள்ள மத்ரஸாவில் சுமார் 200 முஸ்லிம் சிறுவர், சிறுமிகளுக்கு மார்க்கக் கல்வி அளிக்கப்பட்டு வருகின்றது. இதற்கென உள்ள மத்ரஸா கட்டிடம் மிகவும் பழமையானதாக இடிந்து விழக்கூடிய நிலையில் இருந்ததால் பிரிக்கப்பட்டு விட்டது.

இந்த நிலையில் வேறு இடம் கிடைக்காததால் பள்ளி வாசலிலேயே மிகுந்த சிரமத்துடன் பாடம் சொல்லிக் கொடுக்கப்படுகிறது. இதனால் தொழுபவர்களுக்கும் இடைஞ்சலாக இருப்பதோடு, கல்வி கற்கும் சிறுர்களுக்கும் வசதியில்லாமல் இருக்கிறது.

இன்றைய நிலையில் இஸ்லாமிய மார்க்கக் கல்வியில் நம் சமூகத்தினர் எவ்வளவு பிற்போக்காக இருக்கின்றனர் என்பது உங்களுக்கெல்லாம் நன்கு தெரியும். வருங்காலத்திலாவது நம் சமூகம் முற்போக்கடைய வேண்டுமானால், நம் சிறுர்களுக்கு இஸ்லாமிய மார்க்கக் கல்வியளிப்பதில் மிகுதியும் கவனம் செலுத்தியாக வேண்டும். இதை உத்தேசித்தே நம் சமூகத்தின் எதிர்கால நல்வாழ்விற்கு அவசியமான கல்வி நிலயத்தை நடத்துவதற்கு தனியே ஒரு கட்டிடம் கட்டுவது மிகவும் அவசியமாகிறது. இந்த நற்காரியத்தை செய்துமுடிக்க குறைந்து சுமார் ரூ. 25000/- தேவைப்படுகிறது. தற்பொழுது இந்த மத்ரஸா கட்டிடம் அஸ்திவாரம் போடப்பட்டு நிலமட்டத்திற்கு வந்துள்ளது.

இச் செலவு முழுவதையும் தாங்களே செய்துமுடிக்க வருவாயும், வசதியும் இல்லாதவர்களாக இவ்வூர் முஸ்லிம்களிருப்பதால், வெளியூரில் வாழும் முஸ்லிம் பெருமக்களின் உதவி மிகவும் இன்றியமையாததாக இருக்கிறது.

எனவே அல்லாஹ்வுக்கு விருப்பமான வழியில் செலவு செய்வதற்குக் கடமைப்பட்டுள்ள தயாள மனப்பான்மையுள்ள, முஸ்லிம் பெருமக்கள் தாராளமாக உதவ முன்வருவார்கள் என்ற நம்பிக்கையுடன் இக்காரியத்தில் துணிந்து இறங்கியிருக்கிறோம். அல்லாஹ்வுக்கும் அவனுடைய திருத்தூதர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கும் மிகவும் விருப்பமான அறிவு வளர்ச்சிக்கு அவசியமான கல்வி நிலயக் கட்டிட நிதிக்குத் தங்களால் இயன்ற பொருளுதவி புரியுமாறு பணிவன்புடன் வேண்டுகின்றோம்.

இங்ஙனம்,

**முஸ்லிம் மஹாஜன பஞ்சாயத்து சபை,**
**நாச்சியார்கோவில்.**

குறிப்பு: நிதி அனுப்ப வேண்டிய முகவரி:
பொருளாளர், பள்ளிவாசல்,
நாச்சியார் கோவில் அஞ்சல், தஞ்சை (மாவட்டம்)




## 28. அன்பளிப்பு பரிமாறுக!

“ஒருவருக் கொருவர் அன்பளிப்பு வழங்கிக் கொள்ளுங்கள். ஏனெனில், நிச்சயமாக அன்பளிப்பு உள்ளத்தின் கசடுகளை அகற்றிவிடும். மேலும் எந்த அண்டை வீட்டாரும் தம்முடைய அண்டை வீட்டாரை இழிவாகக் கருத வேண்டாம்—அவர் ஆட்டின் குளம்புத் துண்டு ஒன்றை அன்பளிப்பாக அனுப்பிய போதிலும் சரி” என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூ ஹுரைரா (ரலி) அறிவித்துள்ளார்.

—திர்மதீ.

ஒருவருக்கொருவர் அன்பளிப்புகள் வழங்கிக் கொள்வது என்னும் சீரிய பழக்கம் நாளடைவில் மறைந்துவரக் காண்கிறோம். மக்களிடையே நிலவும் பொருளாதாரச் சீர் குலைவுதான் அதற்குக் காரணம் என்று சிலர் வாதிக்கக்கூடும். ஆனால் பெருமானார் (ஸல்) அவர்கள் கூறியுள்ள படி, அன்பளிப்புகள் விலையுயர்ந்த பொருளாகத்தான் இருக்க வேண்டு மென்பதில்லை. தகுதிக்கும் நிலைமைக்கும் தக்கவாறு அன்பளிப்பாக வழங்கப்படும் பொருள், விலை மதிப்பில் மிகவும் குறைந்த ஒன்றுகக் கூட இருக்கலாம்.

அன்பளிப்புப் பொருள் ஒருவர் தம்முடைய பெருமையை அல்லது செல்வச் செருக்கைக் காட்டுவதற்காக வழங்குவதாக இருக்கக் கூடாது. தம்முடைய அன்பை, மரியாதையை, நட்பு வேண்டலைக் காட்டுவதற்காகவே இருக்க வேண்டும். அதனால் அன்பளிப்பைக் கொடுப்பவரின் தகுதிக் கேற்ப அது மதிப்பில் கூடியதாகவோ குறைந்ததாகவோ இருக்கலாம்.

ஆனால், அதற்காக, தமக்குத் தேவையில்லை என்று கழித்து விடும் பொருள்களை அன்பளிப்புச் செய்யலாம் என்று பொருளல்ல. அன்பளிப்புக்கு அடிப்படையான தேவைகள் அதை அளிப்பவரின் உள்ளத்தில் உண்மையான அன்பும், நட்பு உணர்ச்சியும், பிறரை மதிக்கும் தன்மையும் நிலவுவதே. அளிக்கப்படுபவர் பொருளாதார நிலையிலா, பதவியிலோ அல்லது கல்வியறிவிலோ குறைந்தவராக இருக்கலாம். ஆனால் அன்பளிப்பு வழங்கும்போது சமமாக மதித்து நடந்தால்தான் அது அன்பளிப்பு என்ற பெயருக்கு உரியதாகும்.

உண்மையிலேயே அன்புள்ளத்துடன் அனுப்பப்படும் அன்பளிப்புகளைக்கூட ஏற்றுக் கொள்வது தம் கௌரவத்துக்கு உகந்தது அல்ல என்று நினைத்து திருப்பி அனுப்பி விடும் 'பெரிய மனிதர்கள்' உண்டு. அன்பளிப்பை ஏற்றுக்கொண்டால் தாமும் திருப்பிச் செய்ய வேண்டுமே என்ற அச்சத்தினால் அன்பளிப்பைப் பெற மறுப்பவர்களும் இருக்கிறார்கள். இஸ்லாமிய வாழ்க்கை முறைக்கு மாற்றமானவை அத்தகைய அநாகரிகச் செயல்கள்.

உலக நாடுகளிலுள்ள அரசாங்களின் தலைவர்கள் தங்கள் வெளிநாட்டுப்பிரயாணங்களின் போது அன்பளிப்புகளைப் பரிமாறிக் கொண்டு தம் அன்பையும் மதிப்பையும் நட்புணர்வையும் தெரிவித்துக் கொள்வது இப்போதும் வழக்கத்திலிருக்கிறது. நாயகம் (ஸல்) அவர்கள் போற்றியுள்ள இந்த நற்பண்பை நம்முடைய அளவிலும் கைவிட்டு விடாமல் தொடர்ந்து பேணி வருவது அவசியம். ஒவ்வொருவரும் தம் அண்டை, அயலார், நண்பர்கள் ஆகியோரிடம் இப் பழக்கத்தை வைத்துக் கொண்டாலே போதும். உறவிலும் நட்பிலும் ஏற்பட்டிருக்கக் கூடிய விரிசல்கள் தாமே மறைந்துவிடும் உள்ளங்கள் தூய்மையடையும். முயன்று பாருங்கள். ஆனால் அன்பளிப்புகள், உண்மையான அன்பு, நட்பு, மதிப்பு ஆகியவற்றின் அடிப்படையில் எழுந்த எண்ணத்தினால் தூண்டப் பட்டதாகத்தான் இருக்க வேண்டுமென்பதை மறந்துவிடலாகாது. அப்போதுதான் அளிப்பவருக்கும் பெறுபவருக்கும் அது மகிழ்ச்சிதரும்.

  

---

## தொழுகை

இப்பூமியே ஒரு பள்ளிவாயில். தொழுகை நேரம் வந்து விட்டால் எங்கிருந்தாலும் தொழுது கொள்ளுங்கள்.

---

# ஜனாதிபதி
# டாக்டர் ஜாகிர் ஹுசைன்

## -வாழ்க்கை வரலாறு-

டாக்டர் ஜாகிர் ஹுசைன் 1897-ம் ஆண்டு ஹைதரா பாதில் பிறந்தார். ஹைதரா பாதில்தான் அவருடைய தந் தையார் வக்கீலாக தொழில் நடத்திக் கொண்டிருந்தார், "ஆயீனே-தக்கன்" என்னும் சட்டப் பத்திரிகைக்கு ஆசிரி யராகவும் செயலாற்றிக் கொண்டிருந்தார்.

டாக்டர் ஜாகிர் ஹுசைன் ஓர் இங்கிலிஷ் ஆசிரியரிடம் துவக்க காலத்தில் கல்வி கற் ருர். அவருக்கு ஒன்பதே வயது ஆகியிருந்த சமயத்தில் அவருடைய தந்தையார் கால மாகிவிட்டார். இதையடுத்து 1902-ம் ஆண்டில் அவரு டைய குடும்பம் உத்தரப் பிர தேசத்தில் எட்டாவா என் னும் இடத்துக்குப் பெயர்ந்து சென்றது. அங்கே டாக்டர் ஜாகிர் ஹுசைன் தம்முடைய மூன்று சகோதரர்களுடன் ஓர் உயர்நிலைப் பள்ளியில் சேர்ந் தார்.

பிறகு அலீகட் பல்கலைக் கழகத்தில் படித்து அவர் பட் டம் பெற்ருர். இதையடுத்து, பெர்லின் பல்கலைக்கழகத்தி லிருந்து பி. ஹெச் டி. பட்டம் பெற்ருர்.

ஒத்துழையாமை இயக்கத் தின் முதல் கொந்தளிப்பே டாக்டர் ஜாகிர் ஹுசைனை ஆட்கொண்டுவிட்டது. 1920-ம் ஆண்டில் துவங்கிய இந்த இயக்கத்தில் டாக்டர் ஜாகிர் ஹுசைன் கலந்து கொண்டதால் காந்திஜியுடன் அவருக்கு ஏற்பட்ட தோழ மையின் துவக்கமாகவும் இது அமைந்தது. கல்வித்துறை மூலம் நாட்டுப் பணிக்கு தம்மை அர்ப்பணித்துக் கொண்ட மிகச்சில இந்தியர் களில் டாக்டர் ஜாகிர் ஹுசை னும் ஒருவர். அவர்தான் காந் திஜியிடம் சொல்லி 1920-ல் டில்லி நகரில் ஜாமியா மில் லியா இஸ்லாமியா என்னும் கல்வி ஸ்தாபனத்தைஅமைக் கச் செய்தார். தேசீய எழுச்சி பரந்த அடிப்படை கொண்ட தாக இருக்க வேண்டுமானல், அரசியல்என்னும்குறுகியவழி மூலம் மட்டுமே அது சாத்தி யம் ஆகாது என்றும், கல்வி யிலும் பண்பாட்டிலும் புதிய முறைகள் ஏற்பட்டு புதிய அமைப்பில் நாட்டுப்பண்பு ஒன்று உருவானல்தான் இது சாத்தியமாகும் என்றும் டாக் டர் ஜாகிர் ஹுசைன் கருதி ஞர். இந்நாட்டில் நிலை கொண்டுவிட்ட ஆங்கிலக் கல்விமுறை குறுகியதாகவும், ஒரே வகைப்பட்டதாகவும், சத்தில்லாததாகவும் இருக்கி றது என்று அவர் கருதினர். இந்நாட்டுப் பண்பாட்டில் வேரூன்றிய புதிய கல்வி

முறை ஒன்றை ஜாமியா மில் லியா மூலமாக உருவாக்க வேண்டும் என்று அவர் விரும்பினார். வாழ்க்கையிலும் அறிவு வளர்ச்சியிலும்சமுதாய நன்மையை அடிப்படையா கக்கொண்டு முயற்சி நடக்க வும், இன்றைய மாணவர்க ளுக்கு பொறுப்புடன் வாழ்வ தற்கு கற்றுக்கொடுக்கவும், சாதாரண கல்வி நிலையங்க ளில் இடம்பெறாத கலை அம் சங்களில் மாணவர்களுக்கு அக்கறை உண்டாகச் செய்ய வுமே ஜாமியா மில்லியா ஆரம் பிக்கப்பட்டது. கிட்டத்தட்ட 30 ஆண்டுகாலம் டாக்டர் ஜாகிர் ஹுசைன் இந்தக் கல் விக் கழகத்தின் துணைவேந்த ராகச் செயலாற்றியிருக்கிறார். அவரைவிட குறைந்த நம்பிக் கையும் ஈடுபாடும் உள்ள எவ ரையும் ஜாமியாமில்லியாவின் பணிகள்அயரச்செய்திருக்கும்

சுதந்திரப் பேற்றுக்கு முன் னரும் பின்னரும் டாக்டர் ஜாகிர் ஹுசைன், தேசிய வாழ்வில் இயங்கும் சக்திக ளுக்கு பதிலளிக்கக்கூடிய ஒரு கல்வி முறையையும் அமைப் பையும் வகுப்பதல் ஈடுபட்டி ருந்தார். சேவாகிராமத்தில் உள்ள ஹிந்துஸ்தானி தாலீம் சங் என்னும்ஸ்தாபனத்தின் தலைவராக இருந்து கொண்டு அவர் காந்திஜீயின் ஆதாரக் கல்விபற்றிய கருத்துக்களுக்கு நல்ல வடிவம் கொடுத்தார். கையால் செய்யும் காரியங் களையும், மூளையால் செய்யும் காரியங்களையும் நல்ல முறை யில் இணைத்து இரண்டிலும் பலன் காண்பதுதான் அவரு டைய நோக்கம். பள்ளிக் கூடங்கள் வெறும் தொழிற் சாலைகளாகஆகிவிடக்கூடாது என்ற எண்ணத்துடன் அவர் செயலாற்றினார்.

யுனெஸ்கோவுக்குச் சென்ற இந்தியப் பிரதிநிதி கோஷ்டி களில் ஓர் உறுப்பினராக இணைந்திருந்த டாக்டர் ஜாகிர் ஹுசைன் 1956-58 ஆண்டு களில் யுனெஸ்கோவின் நிர் வாக போர்டு உறுப்பினராக தேர்ந்தெடுக்கப்பட்டார். இது தவிர சர்வதேச மாணவர் செர்விஸின் இந்திய கமிட்டிக் கும்,உலக பல்கலைக் கழக செர் விசுக்கும் தலைவராகவும்அவர் பணியாற்றினார். கல்வி, கலா சார துறைகளில் செய்த சேவைகளுக்காக டாக்டர் ஜாகிர் ஹுசைனுக்கு 1954-ல் 'பத்ம விபூஷன்'பட்டம் வழங் கப்பட்டது. டாக்டர் ஜாகிர் ஹுசைன் 1952-ல் ராஜ்ய சபாவுக்கு ஓர் அங்கத்தினராக நியமிக்கப்பட்டார். மீண்டும் 1956-லும் அவர் ராஜ்ய சபா உறுப்பினராக நியமிக்கப்பட் டார். 1957 ஜூலை 6-ந்தேதி பீஹார் கவர்னராக நியமனம் ஆகும்வரை அவர் ராஜ்ய சபாவில் உறுப்பினராய் இருந் தார். 1962 மே மாதம் அவர் இந்தியாவின் துணை ஜனாதி பதியாக தேர்ந்தெடுக்கப் பட்டார். டாக்டர் ஜாகிர் ஹுசைன் பல புத்தகங்கள் எழுதி வெளியிட்டிருக்கிறார். ஹிந்தி, உருது, ஆங்கிலம் ஆகிய மொழிகளில் அவர் அவற்றை எழுதியிருக்கிறார்.




## 12. இடியும் மின்னலும் எந்நேரமோ?

மதாயினுக்கு ஸஜத் திரும்பிச் செல்வதற்கு முன்னிரவு.

கலீபா உமரிடம் விடைபெறுமுகத்தான் அன்னாரோடு வெகு நேரம் வரை பேசிக்கொண்டிருந்தார் அவர். தம்மிடம் தளபதியார் ஸஅத் சொல்லிவிட்டவற்றையெல்லாம் விளக்கமாக எடுத்துக்கூறி, அவர் கலீபாவிடம் தாழ்மையுடன் கோரினார்:

“அமீருல் மூமினீன்! குராஸான் பகுதிக்குள் சென்றுவிட்ட பகைவர்களை நமது சேனை பின்தொடர்ந்து செல்லத் தாங்கள் அனுமதிக்க வேண்டும்! இது நம் தளபதியாரின் சந்தர்ப்ப பூர்வமான கோரிக்கை ஆகும்”

“நம்முடைய படையெடுப்பின் நோக்கம்தான் நிறைவேறிவிட்டதே! அதெல்லாம் எதற்கு? ஜஸீராவுக்கும் அதற்கப்பால் உள்ள பகுதிகளுக்குமிடையே ஒரு நெருப்பு மலைத்தொடர் அரணாக இருந்தால் எவ்வளவு நலமாக இருக்கும்! அவ்வாறிருந்தால், பாரசீகர்கள் நம்மையும் நாம் பாரசீகர்களையும் எளிதில் அணுக முடியாது. அல்லவா? ஈராக்கின் வளங்கொழிக்கும் சமவெளி ஒன்றே நம்முடைய தேவைகளையெல்லாம் பூர்த்தி செய்யப் போதுமானது. பகைவர்மீது வெற்றிக்குமேல் வெற்றிகொள்வதையோ அதனால் கிடைக்கக்கூடிய ஏராளமான வெற்றிப்பொருள்களையோ விட முஸ்லிம் குடிமக்களின் நலத்தையும் அமைதியான வாழ்க்கை நிலையையுமே நான் பெரிதும் விரும்புகிறேன்”— அமைதியாக ஆனால் அழுத்தமாகக் கூறினார் கலீபா உமர்.

அவ்வார்த்தைகளையும் இரண்டொரு நாட்களுக்குமுன் அவர் பள்ளியில் மக்கள் முன் கண்ணீர் வடிய மொழிந்தவற்றையும் இணைத்துப் பார்த்தது ஜைதின் உள்ளம்

“தங்கள் சித்தம்! தளபதியார் அவர்களிடம் தங்களின் உள்ளக் கருத்தைத் தெளிவாக எடுத்துச்

சொல்கிறேன்'' என்றார் ஜைத், தாழ்மையுடன்.

மறுநாள் காலை அவர் மதீனாவிலிருந்து புறப்பட்டுச் சென்றார்.

மதாயின் வந்தடைந்த பின்னர் அவர் இஸ்லாமியத் தலைநகரில் தாம் கண்டதையும் கேட்டதையும் பற்றி தளபதியார் ஸஅதிடம் விபரமாக எடுத்துச் சொன்னார். அவரும் கலீபா அவர்களின் எண்ணத்தை யொட்டி நடந்துகொள்ள முடிவு செய்தார்.

அந்நிலையில், ஹுர்முஸானின் வீழ்ச்சிக்குப்பின் முஸ்லிம்களுடன் சமாதானம்செய்துகொள்ள விரும்பினான் யஜ்தகிர்த் அரசன். அவன் கோரிக்கையை ஏற்கும் விஷயமாக உடனே கலீபாவுக்குக் கடிதம் அனுப்பினார் ஸஅத். அதற்கு மறுமொழியாக, பாரசீக மன்னனுடன் சமரசம் செய்து கொள்வதற்கான அனுமதி கலீபா உமரிடமிருந்து விரைவிலே வந்தது.

''இஸ்லாமியக் குடியரசுக்கும் பாரசீகப் பேரரசுக்குமிடையே பாரசீக மலைத்தொடரை எல்லையாக நிர்ணயித்துக் கொள்ளுங்கள். அவ்வெல்லையை எக்காரணத்தை முன்னிட்டும் முஸ்லிம் சேனை கடந்து செல்லக்கூடாது'' கலீபா மிகக் கண்டிப்பாகக் கட்டளையிட்டிருந்தார்.

அக்கட்டளைக்கிணங்க நடந்து கொண்டார் ஸஅத்.

போர் நடவடிக்கைகள் நின்றுவிட்ட நிலையில், கலீபா உமர் முஸ்லிம்கள் வசமான ஈராக் மாகாணத்தின் புனருத்தாரணத்திற்குத் தேவையானவற்றைச் செய்ய முனைந்தார். அந்நாட்டின் இயற்கை வளங்களை அபிவிருத்தி செய்வதற்கான வழிமுறைகளை அமல் படுத்தினார். விவேகமும் நேர்மையுமிக்க கத்தாபின் மைந்தருக்கு அலீபோன்றவர்களை உறுப்பினர்களாகக் கொண்ட ஆலோசனைக்குழு உறுதுணையாக இருந்தது.

பாரசீக மன்னனின் சொந்த நிலங்கள், அரசனின் வேட்டை வனங்கள் நாட்டைத் துறந்து சென்ற இளவரசர்களும் குறுநில மன்னர்களும் விட்டுச்சென்ற சொத்துக்கள், பூசாரிகள் விட்டுச்சென்ற அக்கினிக் கோயில்களின் உடமைகள் எல்லாம் முஸ்லிம் அரசாங்கத்துக்கு உரிமையாகின. அவையெல்லாம் மதீனாவிலிருந்து நியமிக்கப்பட்ட அதிகாரிகளால் நிர்வகிக்கப்பட்டு வந்தன. அந் நிலங்களை மட்டுமின்றி ஸவாத் சமவெளி முழுவதையுமே போரில்கிடைத்தவெற்றிப் பொருளாகத் தங்களுக்குப் பங்கிட்டுத் தரும்படி முஸ்லிம் படை வீரர்கள் அடிக்கடி கோரிக்கைகள் எழுப்பினர். ஆனால் அலீ, அப்பாஸின் மைந்தர் ஆகியோரின் கோரிக்கையை ஏற்க அறவே மறுத்துவிட்டார். அதற்குப் பதிலாக அரசாங்க நிலங்களிலிருந்து கிடைத்துவந்த வருமானத்திலிருந்து பொது நிர்வாக செலவினங்களுக்குப்போக எஞ்சியது ஈராக்கில் குடியேறியிருந்த அரபியருக்குப் பங்கிட்டுத் தரப்பட்டது.

இஸ்லாமியத் தலைவர் உமர் சார்பில் ஈராக்கின் அதிபதியாக இருந்துவந்த ஸஅதின் நிர்வாகத்தின் கீழே நாடு மிகவும் சிறப்புற்று விளங்கியது. முதலில் அவர் மாகாண முழுவதின் மக்கள் தொகையைக் கணக்கெடுத்தார். பிறகு நிலங்களை அளந்து பாகுபடுத்திச் சீர்திருத்தங்கள் பல செய்தார். இரவில் தன்னந்தனியே, மாறுவேடம் பூண்டு நகர் வலம்வந்து மக்களின் குறைகளைக் கண்டறிந்து, அவற்

றைப் போக்கினார். அவரில்லம் ஏழை, எளியவர்களுக்கு இரவு பகல் எந்நேரமும் திறந்திருந்தது. தேவையிருந்தவர்கள் எவரும் அங்குவந்து வெறுங்கையுடன் திரும்பியதில்லை. குறையுள்ளோரின் நெஞ்சங்களை நிறைவுறச் செய்வதில் அவர் பெருமகிழ்ச்சி கொண்டார். "அன்பும் பண்புமே முஸ்லிம்களின் அடையாளங்கள்" என்று அடிக்கடி கூறிவந்தார். அவருடைய அன்பிற்கு முஸ்லிம் மட்டுமன்றி முஸ்லிம் மல்லாதருமே பாத்திரமானார்கள். அவர் காட்டிய அன்பின் விளைவாக ஈராக்கில் ஏராளமானவர்கள் இஸ்லாத்தில் சேர்ந்தனர்.

அவ்வாறு, வெகு விவேகமுடன் கலீபா உமரும் மிக்க நிதானமுடன் அவருடைய தளபதியார் ஸஅதும் மற்றவர்களும் நடந்துவந்த போதிலும், பாரசீகர்களுடன் மீண்டும் போர் செய்வதைத் தவிர்க்க முடியாத நிலை உருவாகிவந்தது. தன்னுடைய னெப்புமிகுந்த தலைநகரையும் வளம்பொருந்திய இரு மாகாணங்களையும் இழந்துவிட்ட அவமானம் பாரசீகப் பேரரசன் யஜ்த்கிர்தைப் பிடுங்கித் தின்றது. வஞ்சமும் வெஞ்சினமும் அவன் உள்ளத்தில் கொப்பளித்துக்கொண்டிருந்தன. அவனுடைய மாகாணாதிபதிகள் அநேகர் முஸ்லிம்களால் முறியடிக்கப்பட்டு, பல புறங்களிலும் சிதறியோடி இருந்தனர். அந்நிலையில் தங்களை மீண்டும் தோல்வியுறச் செய்த அரபியர் மீது பழிதீர்க்க, மறுபடியும் அவர்கள் மீது படையெடுத்துச் செல்லவேண்டுமெனப் பாரசீக மன்னவனை அவனது சேனை வற்புறுத்தி வந்தது

மெல்லமெல்ல, முஸ்லிம்களை வம்புக்கிழுக்கும் குறும்புத்தனமான நடவடிக்கைகளில் பாரசீகர்கள் இறங்கிவிட்டனர்

கதிஸிய்யா களத்திலிருந்து தான் புறமுதுகுகாட்டி ஓடியதை மறந்தவனாக கூஜிஸ்தான் மாகாணாதிபதியான ஹுர்மூஸான் தனது மாநிலத்தின் எல்லையோரமிருந்த அரபிக் குடியிருப்புகளை அடிக்கடி தாக்கிவந்தான். முறியடிக்கப்பட்ட ஒவ்வொரு தடவையிலும் அவன் முஸ்லிம்களுடன் சமாதானத்திற்கு வந்தான் அடுத்து விரைவிலேயே அந்த சமாதான உடன்பாட்டை மீறுவதில் அவன் தனி இன்பம் கண்டான்.

அது ஒருபுறம் நடக்க, பாரசீக வளைகுடாவின் தென் கரையிலும் பாரசீகர்கள் விஷமத்தனம் புரிய முற்பட்டார்கள். அதை முளையிலேயே கிள்ளி யெறிந்துவரும் எண்ணத்திலே வளைகுடாவின் மேற்புறத்திலிருந்த பஹ்ரைன் மாகாணத்தின் முஸ்லிம் அதிபதி தமது படைகளுடன் கடலைக் கடந்து சென்றார். அக்கரை சேர்ந்தபோதுதான் எதிரிகளின் பொறியில் தாம் வலிய அகப்பட்டுக்கொண்டதை உணர்ந்தார். அவருக்கும் அவருடன் சென்ற முஸ்லிம் வீரர்களுக்கும் ஏற்பட்ட தர்ம சங்கடமான நிலையறிந்த கலீபா உமர் பஹ்ரைன் அதிபதியையும் அவருடைய படையினரையும் மீண்டும் இக்கரை சேர்ப்பதற்கொரு உதவிப்படையை விரைவில் அனுப்பிவைத்தார். அப்படை தன்னுடைய காரியத்தை வெற்றியுடன் முடித்தது.

அதன் விளைவாக, அண்டைப் பிரதேசங்களிலிருந்து பாரசீகர்களும் முஸ்லிம்களுக்கு எதிரான நடவடிக்கைகளில் ஈடுபடஆரம்பித்தனர்.

ஆகவே, ஈராக்கின் தென்பிராந்தியங்களில் நிலையை உறுதிப்படுத்துவதற்காக கலீபா உமர் உத்பாவை அனுப்பிவைத்தார். உபுல்லா துறைமுகத்தைக் கைப்பற்றும்படி அவருக்கு உத்தரவிடப்பட்டது. அதன் பேரில் பஹ்ரைனிலிருந்த இஸ்லாமிய வீரர்களை அழைத்துக்கொண்டு சென்று, அத்துறைமுகத்தை முஸ்லிம்கள் வசம் கொண்டுவந்தார் உத்பா.

அந்நேரத்திலே ஹுர்மூஸான் மீண்டும் முஸ்லிம்களுக்குத் தொல்லை கொடுக்கத் துணிந்தான். தன்னுடைய தலைநகரான அஹ்வாஸிலிருந்து முஸ்லிம் படை முகாம்களைத் தாக்கத் துவங்கினான். உடனே அதற்கான எதிர் நடவடிக்கைகளில் இறங்கினர். உத்பா. 'பதவி' கூட்டம் ஒன்றின் உதவியுடன் அஹ்வாஸை நோக்கி முன்னேறிச் சென்று, அங்கிருந்து ஹுர்மூஸானை வெளியேறும்படி செய்தார். ஏற்பட்ட உடன்பாட்டின்படி இஸ்லாமிய ஆட்சியின் கீழ் வந்த கூஜிஸ்தான் முஸ்லிம்களுக்கு உதவிய 'பதவி'களிடம் ஒப்படைக்கப்பட்டது.

அவ்வாறு கொஞ்சம் கொஞ்சமாக முஸ்லிம்கள்மீது பகைமை மேகங்கள் சூழ்ந்து வந்தன. எந்த நேரம் அவை ஒன்று திரண்டு இடியும் மின்னலுடன் போர் மழை பொழியுமோ?

# எழுவீர்! ★ ★ விழிப்பீர்!”

கால்கள் பூமியில் இருந்தாலும் சிந்தனை வானுற ஓங்கி வளர வேண்டும் என்பதை உணர்த்தும் மினாராக்கள்.

‘என்னைப் போல் உங்கள் இதயமும் ஆழமாகவும், அகலமாகவும். அன்பால் நிறைந்ததாகவும் இருக்க வேண்டும்’ என்பதைக் கூறாமல் கூறும் ஹவ்லுகள்.

‘வியப்பு மிக்க உலகைப் படைத்து இதில் அனந்தங் கோடி இன்பத்தை வைத்த அல்லாஹ்வை வணங்கி நன்றி செலுத்த வாருங்கள்; நன்மையின் பக்கம் வாருங்கள்’ என்று ஐங்காலமும் அழைக்கும் இனிய பாங்கு.

‘சிரசைமட்டும் சாய்த்து வணங்குவதால் என்ன பலன்? இதயத்தையும் தாழ்த்தி வணங்குங்கள்’ என்று அச்சமூட்டி எச்சரிக்கும் மிம்பர்.

உலக ஆரவாரத்தால் அலைக்கழிக்கப்படும் நெஞ்சை ஒருவழிப் படுத்த உதவும் குளுமையான அமைதி.

இவை நமது பள்ளிவாசல்களின் சிறப்புக்கள்.

சூரிய கிரணங்களால் நான் பரிசுத்தமடைகிறேன். முஸ்லிம்களே! என்னை பயன்படுத்தி நீங்கள் பரிசுத்தமடையுங்கள்’ என்று அழைக்கும் ஹவ்லுகளில் ஒலூச் செய்து–அதாவது ‘தகாதன செய்யேன்’ என்றுகைகளைக் கழுவி, ‘பேசக் கூடாதன பேசேன்’ என்று வாயைக் கொப்பளித்து, ‘நாத்திகரின் வாடையும் முகரேன்’ என்று நாசித் துவாரங்களைச் சுத்தி செய்து, தீய சிந்தனைகளைப் போக்கத் தலையை மஸஹு செய்து, ‘தடுக்கப்பட்ட வழி செல்லேன்’ என்று கால்களைக் கழுவி பள்ளி வாசலுக்குள் நுழைகிறோம்.

அவசர அவசரமாகத் தொழுது விட்டு கடமை முடிந்தது என்று வெளியே வருகிறோம்.

தற்போது பள்ளிவாசல்களை தொழுகைக்காக மட்டும் பயன் படுத்துகிறோம்.

அல்லாஹ்வின் திருத்தூதர் முஹம்மது (சல்அம்) அவர்களின் திருக்கரங்களால் கட்டப் பட்ட மஸ்ஜிதுன் நபவி தொழுகைக்காக மட்டும் பயன்படுத்தப் படவில்லை.

“மஹதி”

அங்கே தக்கன-தகாதன அறிவிக்கப்பட்டன; வாழ்க்கை வழி வகுக்கப்பட்டது; அறிவு தீட்டப் பட்டது; முஸ்லிம்களின் சிக்கல்கள் தீர்க்கப்பட்டன; ஏழைகளின் கண்ணீர் துடைக்கப்பட்டது; தேவையுள்ளோரின் தேவைகள் பூர்த்தி செய்யப்பட்டன.

ஒற்றுமை வளர்க்கப்பட்டது; வீரம் விதைக்கப்பட்டது;

கொடுமை செய்யப்பட்டோரின் கொடுந் துயர்களைய முஜாஹி தீன்கள் பயிற்சியளிக்கப்பட்ட னர்; வெற்றிக்குத் திட்டங்கள் தீட்டப்பட்டன.

அரசியல் அலசப்பட்டது; தலை வர்கள் உருவாக்கப்பட்டனர்; சமுதாயத்தின் பாதுகாப்புக்கும் நன்மைக்கும், வளர்ச்சிக்கும் வழிவகுக்கப்பட்டது.

அன்பும், பண்பும், தியாக உணர்வும் வளர்க்கப்பட்டன.

குலபாயெ ராஷிதீன்கள்காலத் திலும், உமையா, அப்பாஸிய கலீபாக்கள் காலத்திலும் பள்ளி வாசல்கள் பொலிவு பெற்று விளங்கின.

மாபெரும் குர்ஆன் விரிவுரை யாளர்கள், ஹதீதுகளைப் பயின்றவர்கள், பிக்ஹு சட்ட திட்ட மேதைகள், இறை நேசர் கள் அனுதினமும் பள்ளிவாசல் களில் அரிய அறிவுரைகள் ஆற் றினர். அவர்களின் சொற்பொழி வைச் செவிமடுக்க அடக்க ஒடுக் கமாக கலீபாக்களும் பிறருக்குச் சமமாகப் போய் அமர்ந்தனர்.

அந்தக் காலத்தில்தான் ஒவ் வொரு முஸ்லிமும் ஓர் ஆலிமாக விளங்கினர். உலகெங்கும் அறிவு விளக்கை ஏந்திச் சென்று அறி யாமை இருளை அகற்றினர். அதன் காரணமாக முஸ்லிம்கள் உலகினரால் மதிக்கப்பட்டனர். எச் சமூகமும் எய்தியிராத உயர் நிலையை இஸ்லாமிய சமுதாயம் எய்திற்று.

அறிவிலும், கலைகளிலும், விஞ் ஞானத்திலும், வாணிபத்திலும், கைத்தொழிலும், வேளாண்மை யிலும் முஸ்லிம்களே சிறந்து விளங்கினர்; உலகினருக்கு வழி காட்டிகளாயிருந்தனர்.

ஆனால் இன்றோ?

வாழத்தெரிந்தவர்கள் மார்க் கம் தெரியாதவர்களாகவும், மார் க்கம் தெரிந்தவர்கள் வாழத்தெரி யாதவர்களாகவும் இருக்கிறார் கள்.

மார்க்க அறிவு குன்றிவருகிறது. சிறுவர், சிறுமியருக்கு மார்க்கக் கல்வி புகட்டிவந்த மதரசாக்க ளும் மறைந்து விட்டன.

இளைஞர்களோ நாத்திகத்தின் பக்கம் சாய்ந்து வருகின்றனர்.

நமது பள்ளிவாசல்களில் மீண் டும் மார்க்கக் கல்வி புகட்டும் மதரசாக்கள் தொடங்கப்பட வேண்டும். அர்த்தத்துடன் குர் ஆன், ஹதீது போதிக்கப்பட வேண்டும், சிறுவயதில் மார்க்கக் கல்வி பெற வாய்ப்பற்றுப்போன வருக்காக மார்க்க அறிவு புகட்ட பேச்சுத்திறன் மிக்க மார்க்க அறி ஞர்களின் சொற்பொழிவுகளுக்கு ஏற்பாடு செய்ய வேண்டும். ஆண்டுக்கு ஒருமுறை அல்ல, அனுதினமும் இரவில் ஒரு மணி நேரம் இரண்டு மணி நேரம் தூங்குமுன் பள்ளிவாசலில் அனை வரும் வந்து குழும வகைசெய்ய வேண்டும்.

பள்ளிவாசலில் ஒருபுறம்வாசக சாலை நிறுவ வேண்டும். இஸ்லா மிய நூல்களையும், பத்திரிகைக ளையும் வாங்கிவைக்க வேண்டும் வீண் பொழுதுபோக்கும் வேளை யில் அங்குவந்து அனைவரும் அறிவு பெறவேண்டும்.

எல்லா நூல்களையும் பத்திரி கைகளையும் ஒருவர் விலை கொடு த்து வாங்கி வாசிக்க இயலாத நிலையில் இருக்கலாம், அவர்கள் இத்தகைய வாசக சாலைகளால் மிகவும் பயன் பெறுவார்கள்.

"சோம்பேறியின் மூளை, இப்லீ

சின் செயலகம்" என்று கூறப் படுவதுண்டு. இப்லீசின் செய லகத்தை அல்லாஹ்வின்செயலக மாக மாற்ற வேண்டும்.

வாணிகத்தில் ஈடுபட்டிருப் போர் வாழ்வதற்காகப் பொரு ளீட்ட வேண்டுமா, பொருளீட்டு வதற்காக வாழவேண்டுமா என் பதைப்பற்றி முடிவு செய்து கொள்ள வேண்டும்.

வெறும் உடல் வளர்ச்சி வாழ் வாகாது. அறிவு வளர்ச்சியில் ஈடுபட்டு ஆன்ம ஈடேற்றம் பெற முயலாதவர் வாழ்வு நிறைவு பெற்ற வாழ்வாகாது.

முஸ்லிம் என்று சொல்லிக் கொள்வதால் பிரயோஜனமில்லை முஸ்லிமாகநடந்துகாட்டவேண் டும், முஸ்லிமாக வாழவேண்டும். அதற்கு மார்க்க அறிவு நிறைய தேவை.

ஒவ்வொரு ஊரிலும்,ஒவ்வொரு மஹல்லாவிலும் உள்ளவர்கள் பள்ளிவாசலில் ஒன்றுகூடி வச

---

உருவகக் கதை.

# கொடியும் - மரமும்

"ஸாலமன்"

உறுதியான ஒரு மரத்தின்மேல் அழகியதோர் கொடி படர்ந்திருந்தது. கண்ணைக்கவரும் அழகிய மலர்கள் அந்தக் கொடியில் பூத்துக் குலுங்கியிருந்தன. வளைந்து, வளைந்து பரவிப் படர்ந்திருந்த அந்தக் கொடியில் பசுமை நிற இலை களும், இளந் தளிர்களும் நிரம்பியிருந்தான.

மரத்தைப் பார்த்துக் கொடி சொல்லிற்று, "நான் உன் னைச்சுற்றி வளைத்து உன்மேல் படர்ந்திருப்பதினால் தான் உனக்குத் தனியழகும் பெருமையும் உண்டாகிறது" என்று.

மரம் பதில் சொல்லியது, "உன்னால் எனக்கு ஓரளவு அழகு உண்டாகிறது என்பது உண்மைதான். ஆனால் நீ என்னைச் சுற்றி வளைத்து என்மேல் படர்ந்திருப்பது எனக்கு நீ அழகு தருவதற்காக அல்ல; உனக்கு வேறு ஆதரவு இல் லாததினால்தான் நீ என்மேல் படர்ந்துகிடக்கிறாய். உனக்குச் சந்தேகமாக இருந்தால் நீ என்னைவிட்டு விட்டுத் தரையில் படர்ந்துபார்" என்று.

அந்தச் சமயத்தில் பலமானதோர் காற்று வீசியது. கொடி தன்னை மறந்து, தன் பிடியைத் தளர்த்தியிருந்தத னால், அது மரத்தை விட்டு விலகி தரையில் விழுந்தது.

அந்த வழியே சென்றவர்கள் அதன் பூக்களைக் கொய்த னர். சிலர் அதை மிதித்துச் சமட்டிக்கொண்டு நடந்தனர். மிருகங்கள் அதன் இலைகளையும் பூக்களையும் தின்றன.

கொடி தன் உண்மையான பலத்தையும், ஆதரவற்ற தன்மையையும் உணர்ந்தது.

திக்கேற்பத்திட்டம்தீட்டி செயல் பட முன்வர வேண்டும்.

ஆண்டுக்கு ஒருமுறை மீலாத் விழா நடத்திவிட்டு உறங்கி விடுவதால் என்ன லாபம்?

தினசரிப் பத்திரிகையைப் பிரித்து 'இன்றைய நிகழ்ச்சிகள்' எனும் தலைப்பின் கீழ் வருவன வற்றை ஊன்றிப்படியுங்கள்.

ஒரே ஊரில், ஒரே நாளில் பல் வேறு இடங்களில்சமய, புராண, இதிகாச விரிவுரைகளும், வேத தத்துவ விசாரணைகளும், அர்ச்சனை, கும்பாபிஷேகங்களும், நடைபெறுவதைக் காணலாம்.

சுகமளிக்கும் சுவிசேஷப் பிர சங்கங்களையும் கேட்கலாம்.

உலகுக்கு வழிகாட்டிய முஸ் லிம்கள், தங்கள் விதியைகப்ருஸ் தானில் புதைத்துவிட்டு குறட்டைவிட்டு உறங்குகிறார்கள்.

காற்றடிக்கிறது; கடல் குமுறுகிறது. காலம் முஸ்லிம்களை எச்சரிக்கிறது இவ்வெச்சரிக்கையை பொருட்படுத்தாமல் முஸ்லிம்கள், அறியாமை வெள்ளத்தில் மிதந்து சென்றால் அழிவு எனும் ஆழ்கடலில் விழுந்து விடுவார்கள்.

## எழுவீர்!
## விழிப்பீர்!

ஒன்றுபட்டு, வரிந்து கட்டி செயல்பட முன் வாரீர்!

ஒருநாள் மரணம் உண்டு. கியாமநாள் உண்டு கேள்விகள் கேட்கப்படுவீர்கள். அப்போது கைகளைப் பிசைந்து கண்ணீர் விடுவதால் பலன ஏற்படாது. ஒவ்வொரு நாளும் உங்கள் ஆயுள் குறைந்து வருவதை மறந்துவிட வேண்டாம்.

703. நோயைத் தெரிந்து கொள்பவன்தான் வைத்தியன்.

—ஜான்ஸிபார்

704. தெளிவானதொரு குறிக்கோளை நோக்கி முயற்சி செய்.

—ஸயாம்

705. மீன் தலையிலிருந்து துர்நாற்றம் வீசத் தொடங்குகிறது. (ஊழல் உயர் வட்டாரங்களில் ஆரம்பமாகிறது.)

—துருக்கி

706. கதவின் வழியாக அநியாயமாக வரும் செல்வம் ஜன்னல்களின் வழியாக வெளியே செல்கிறது.

—எகிப்து

707. பிரயாணம் செய்யாதவனுக்கு மனிதர்களின் பெறுமதி தெரியாது.

—அராபியா

708. மனிதனுக்கு, மேலே இருக்கும் சிற்றரசன் அவன் மனச்சாட்சி.

—ஆப்பிரிக்கா

709. ஏழ்மையைப் பார்த்துச் சிரிக்கிறவன் அதைத் தன் பக்கம் இழுக்கிறான்.

—ஆப்பிரிக்கா

710. ஒரு மனிதனைத் தெரிந்து கொள்வதென்பது அவன் வதனத்தையல்ல, அவன் இதயத்தை.

—சீனு

711. போராட்டத்தை நிறுத்து, நீ வாழ்வதை நிறுத்திவிட்டாய்.

—சீனு

712. சண்டையில் முதலில் வாயை மூடுகிறவன் நல்ல குடும்பத்தில் பிறந்தவன்.

—ஹீப்ரு

713. பொன், மண், பெண் ஆகியவை சண்டையின் மூல காரணங்கள்.

—இந்தியா

# ஆயிரம்

714. நாளைக்கு நாளையக்காற்று வீசும்.

—ஜப்பான்

715. அநேக சமயங்களில் கவலை ஒரு சிறு காரியத்திற்குப் பெரிய நிழலைத் தருகிறது.

—ஸ்வீடன்

716. விவசாயிகள் நம்முடைய மதில்கள்.

—ஸ்விட்ஸர்லாந்து

717. கையிலிருக்கும் மாற்று மருந்தை நம்பி விஷத்தை அருந்தாதே.

—அராபியா

718. உன் உள்ளத்தை இருளாக்காதே, எல்லாம் உனக்குத் தெளிவாகத் தெரியும்.

—சீனு

719. ஒரு கள்ளனைக் கொள்ளையடிக்க இன்னொரு கள்ளன் எப்பொழுதும் உண்டு.

—சீனு

720 அநேக சமயங்களில் ஒரு மனிதனுடைய வாழ்வு ஒரு பழ மொழியினமேல் கட்டப்பட்டிருக்கிறது.

—ஹீப்ரு

721. இவ்வுலகில் நேசிக்கப்படுபவர்கள் மறு உலகில் நேசிக்கப்படுபவர்கள்.

—இந்தியா

722. தன்னைக்குலுக்கும் கரங்களை மலர்களால் மூடும் மரத்தைப்போல் இரு.

—ஜப்பான்

723. உன் எதிரியின் புன் சிரிப்பை நம்பாதே.

—கீழ்நாடு

724. வீரனின் வியர்வை இரத்தம்.

—ஆப்பிரிக்கா

725. மது அருந்தியவனுக்கு நிதானம் உண்டாகிறது; பணப்போதை ஏறியவனுக்கு நிதானம் உண்டாவதில்லை.

—ஜான்ஸிபார்

**(தேர்ந்து தமிழாக்கியவர்: எஸ். ஏ. சுலைமான், எம். ஏ)**

**பி. பி. சி. வானொலியின் மூலம் உலகமெங்கும் நாள் தோறும் தவருமல் ஒலித்துக் கொண்டிருக்கும் ராட்சச மணியைப் பற்றிய சில சுவையான தகவல்களைத் தரும் இக்கட்டுரையை அல்ஹாஜ் பா. தாவூத்ஷா சாஹிப் பி. ஏ. அவர்கள் அளிக்கிருர்கள்.**

# "குண்டு மணி"

# பிக்பென்

"பிக்பென்" என்னும் உலகப் புகழ்பெற்ற பெரிய கடிகாரம், இங்கிலாந்தின் தலைநகரான லண்டன் மாநகரிலுள்ள பார்லிமெண்ட் மாளிகையில் மணியடிக்கும் மாகடிகாரமாகும். பிரிட்டிஷ் ரேடியோவும் ஓரொருநாளும் இதன் மணியை உலகினுக்கு ஒலி பரப்பி வருகிறது. இந்த பிக் பென்னுக்கு இணையானவேருெரு கடிகாரம் இவ்வுலகில் எங்குமே யில்லை. இதன் மணி காட்டும் இலக்க முகப்பின் குறுக்களவு 23 அடியாகும். இதிலுள்ள நிமிஷம் காட்டி — பெரியமுள் 14 அடி நீளமுள்ளதாயிருக்கிறது. ஓரொரு நிமிட முள்ளும் ஒரு கிலகிராமுக்கு மேற்பட்ட எடையுள்ளதாயமைந்துள்ளது. மணி காட்டும் முள் சிறிது குட்டையாயிருக்கிறது; ஆயின், ஒருமுள் அரைட்டன் எடையுள்ள கட்டி உலோகத்தால் அமைந்துள்ளது. முகப்புத்தகட்டில் எழுதப்பட்டுள்ள மணிகாட்டும் இலக்கம் 2 அடி நீளமுள்ளதாயிருக்கிறது. கடிகாரத்தில் அடியில் தொங்கும் பெண்டுலமோ, 13அடிநீளமும், $2\frac{1}{2}$ டன் எடையும் உள்ளதாய் அமைதிருக்கிறது. முன்பெல்லாம் கையால் இதைச் சுற்றினாகள்; இப்பொழுது மின்சார மோட்டாரால் சுற்றப்படுகிறது. கடிகார முகப்புக்கள் 4-ம் சேர்ந்து 16டன் நிறையுடையன வாயிருக்கின்றன இவற்றில், நாளொன்றுக்கு ஒரு வில்லை வீதம் ஆண்டு 365 நாட்களுக்கும் அத்தனை கண்ணுடி வில்லைகள் பொருத்தப்பட்டுள்ளன.

கி. பி. 1834-ல் பார்லிமெண்ட்டின் பெரும் பகுதி தீக்கிரையாயிற்று. 1844-ல் கூடிய சபை புதுக் கட்டிடத்தில் கடிகார மண்டபமொன்று இருக்கவேண்டுமெனத் தீர்மானித்தது. கண்ட்ராக்டர் கம்பெனியார் 1852-ல் பார்லிமெண்ட்டைக் கட்டிமுடித்து விட்டார்கள். அப்பால் 7 ஆண்டுகள் பிடித்தன கடிகாரம் வைக்க. அரசாங்க வானசாஸ்திரிவிதித்த கடிய நிபந்தனைப்படி சரியான மிகச்சரியான சக்கிண்டு காட்டும் கடிகாரம் அமைக்க எவரும் முன் வரவில்லை. இதுகாட்டும் மணி கிரீன்விச்சிலுள்ள ஜோதி மண்டபத்தில் கணக்கிடப்படும் சூரிய ஓட்டத்துக்கு ஒவ்வொரு நாளும் இருமுறை சரிசொல்ல வேண்டும் எவராலும் இது முடியவில்லை. ஆனல், டெனிஸன் என்னும் நாமமுடைய லாயர் கடிகார நேரத்தைச் சரிப்படுத்திவரலாயினர். இவரது விடா முயற்சியால் இறுதியில் நேரம் சரிக்கட்டப்பட்டு விட்டது. இவர் கடிகாரமணியை

13½ டன்னாகவும், அதை அடிக்கும் சம்மட்டியை 7 அந்தராகவும் அமைத்தார். இறுதியாக இந்தக் கடிகாரம் பூமியிலிருந்து 200 அடி உயரத்துக்குத் தூக்கப்பட வேண்டியவேலை எஞ்சியிருந்தது. வேர்த்து விருவிருக்கும் வேலையாட்கள் புல்லி உருளைகளையும் சங்கிலிகளையும் கொண்டு ஒரு வாரகாலம் இழுத்து இழுத்து உயர்த்தினார்கள். கடிகார முள்கள் உருக்கு இரும்பாலாகியவை பிறகு இலேசு உலோகத்தால் செய்யப்பட்டன. கேம்பிரிட்ஜிலுள்ள செயின்ட் மேரிமாதா கோவில் மணியோசை போன்ற ஓசை இப் புதிய கடிகாரத்துக்கு அமையும்படி டெனிஸன் சரிக்கட்டினார்.

ஆனால், "பிக்பென்" என்னும் நாமம் எப்படிவந்தது. இந்தப் புதுகடிகாரத்துக்கு நாமம் சூட்டும் வைபவத்தில் சர்பென்ஜமின் ஹால் (வேலைப்பாடுகட்குத் தலைவராய 'முதல் கமிஷனர்') ஒரு ஸ்பெஷல் பார்லிமெண்ட் கூட்டத்தில் வெகு சவடாலடித்துப் பேசினார். "செயின்ட் ஸ்டீபன்" எனப் பெயர் சூட்டலாமென அவர் உரத்த குரலில் மிக்க குதூகலத்துடன் பேசி முடித்தபொழுது, அங்கிருந்த ஒருவர் வேடிக்கையாக, "ஏன் Big Ben பிக்பென்" என்று பெயர் வைக்கூடாது? என்று கூறினார், அக்கணமே அனைவரும் "பிக்பென், பிக்பென்" என்று கூச்சலிட்டனர். பென்ஜமின் ஹால் உண்மையிலே குண்டு போலப் பருத்த ஆசாமி; "பென்" என்பது பென்ஜமின் என்னும் பெயரின் சுருக்கம். எனவே இன்றுவரை "பிக்பென்" என்பதே ஊர்ஜிதமாயிற்று. அக்கடிகார மணியே "பிக்பென்" என்று பெரிடப்பட்டாலும், இப்பொழுது அந்தக் கடிகாரமே அந்தப் பெயரைக்கொண்டு அழைக்கப்பட்டு வருகிறது.

—நன்றி : "ஹிந்து"




## 15. தளபதியின் புதிய அனுபவம்!

ஸ்பெயின் தேசத்தின் தலைநகரமான தாலதோ கோட்டைக்கு அருகாமையில் தண்டு இறங்கியிருந்த அரபியர் படையில் பரபரப்பு மிகுந்திருந்தது.

அதற்கு முந்திய நாளன்று மாலை நேரத்தில் குதிரைகளின் மீதமர்ந்து உலாவிவரச் சென்ற இளவரசி மரியாவும் யூத அழகி ரேச்சலும் முகாமுக்குத் திரும்பி வந்து சேரவே இல்லை.

இருட்டிய பிறகு வெகு நேரமாகியும்கூட அப் பெண்களைக் காணாதிருந்த ஜூலியன் பிரபுவும் ரேச்சலின் தந்தை டேவிடும் சஞ்சலமடைந்து அவர்களைத் தேடமுற்பட்டார்கள்.

எங்காவது வழிதவறிச் சென்றிருப்பார்களோ என்ற ஐயத்துடன் அவர்களைத் தேடிக் கண்டுபிடித்து வருவதற்காக நாலாபுறமும் வீரர்கள் அனுப்பப்பட்டனர்.

அவர்களைத் தேடச் சென்ற வீரர்கள் நள்ளிரவுவரை அலைந்து திரிந்தும்கூடக் கண்டுபிடிக்க முடியாமல் திரும்பினர்கள். அதற்கு மேல் தாரிக்கிற்குத் தெரிவிக்காமல் இருப்பது சரியல்ல என்ற முடிவுக்கு வந்த இருவரும் தளபதியின் கூடாரத்திற்கு விரைந்தனர். இளவரசன் ஈஸாவும் தாரிக்கின் கூடாரத்துக்கு வர வழைக்கப்பட்டான்.

நான்கு உள்ளங்கள் அப் பெண்களைத் தேடித் தவித்துக் கொண்டிருந்தன.

ஒன்று, யூதக் கிழவர் டேவிட் உடையது என்பதும், மற்றொன்று ஈஸாவினுடையது என்பதும் சொல்லாமலே விளங்கும்.

தன் மகள் புளோரிந்தாவை, பலாஜியஸிடம் பறி கொடுத்த பிறகு அவளைத் திரும்ப அடைய முடியும் என்ற நம்பிக்கை ஜூலியனுக்கு ஏற்படவே இல்லை. தாரிக்கும் ஈஸாவும் எவ்வளவு தான் ஆறுதல் கூறினாலும் உறுதியளித்தாலும் நம்பிக்கை இழந்தவனாக, ஏக்கங்கொண்டு, பித்தம் பிடித்தவனின் நிலையில் இருந்தான் சியூட்டா சிற்றரசன். எனவே புளோரிந்தாவுக்கு பதிலாக மரியாவே அவனுக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்து வந்தாள். அப்போதெல்லாம் தன் அருமை மகள் புளோரிந்தாவே தன்னருகில் இருப்பது போன்ற பிரமை அவனுக்கு ஏற்படும். தன் மகளுக்குப் போட்டியாக முளைத்தவள் என்று அவனுக்கு இடைக்காலத்தில் தோன்றியிருந்த எண்ணம் மாறி, இப்போது, ஜூலியன் மரியாவைத் தன் மகளைப் போலவே நேசிக்கத் தொடங்கியிருந்தான். ஆகையால் ஜூலியனுடைய மனமும் அப்பாடு பட்டதில் வியப்பில்லை.

ஆனால் தளபதி தாரிக்கிற்கு ஏற்பட்ட உணர்வுதான் புதுமையானது; விசித்திரமானது; அதற்கு முன் அவன் அறிந்திராதது! மரியாவுடன் ரேச்சலும் சேர்ந்து காணமற் போனாள் என்று கேள்விப்பட்டதுமே அவனுடைய உள்ளம் ரேச்சலுக்காக ஏங்க ஆரம்பித்தது. அதைப் பற்றி அவன் சிந்தித்துப் பார்க்கத் துவங்கிய போது அது அவனுக்கே ஆச்சரியமாக இருந்தது! அதற்கு முந்திய சில நாட்களுக்குள் ரேச்சல் அந்த அளவுக்கு தாரிக்கின் உள்ளத்தை ஆக்கிரமித்துக் கொண்டு விட்டாள்.

இஸ்லாமியப்படை தாலதோவை நோக்கி முன்னேறத் தொடங்கி அதை நெருங்கி வந்துகொண்டிருந்தபோது, அந்த நகரத்திலிருந்து தப்பியோடிவந்து தங்களிடம் அடைக்கலம் புகுந்திருந்த யூதர் டேவிடும் அவருடைய மகள் ரேச்சலும், அளிக்கக்கூடிய தகவல்கள் தங்களுடைய ராணுவ நடவடிக்கைகளுக்கு மிகவும் உதவியாக இருக்கும் என்ற எண்ணம் தாரிக்கிற்கு ஏற்பட்டது. முதன் முதலாக சிம்மக்குன்று பகுதியில் அவ்விருவரையும் சந்தித்த போது, தந்தையும் மகளும் சொன்ன விஷயங்கள் அவனுடைய மனத்தில் அப்போதும் பசுமையாக நினைவில் நின்றன. எனவே, அவ்விருவரையும் தன் கூடாரத்திற்கு அடிக்கடிவரவழைத்து, தலைநகரைப் பற்றிய தகவல்களை ஒவ்வொன்றாகக்கேட்டறிந்து வந்தான் தாரிக்.

அத்தகைய சந்திப்புகளினூடே தான். தாரிக், மெல்ல மெல்லத் தன்னையறியாமலேயே, ரேச்சலிடம் மயங்கித் தன் உள்ளத்தைப் பறிகொடுத்துக் கொண்டிருந்தான் அவனை மயக்கியது அவளுடைய அழகா, அல்லது அறிவுக் கூர்மையா என்று தன்னைத் தானே அவன் கேட்டுக் கொண்டான். இரண்டும்தான் என்று விடையளித்தது அவனுடைய உள்மனம்.

அவர்கள் தாலதோ கோட்டையின் அருகில் படையிறங்கி ஒரு வாரத்துக்குமேல் ஆகியிருந்தது. இஸ்லாமியப் படையின் வருகை பற்றி அறிந்தவுடனே தாலதோவின் கோட்டைக் கதவுகள் மூடப்பட்டன. அரபியர் படை தலைநகரை அவ்வளவு நெருங்கியிருந்தாலும் அதுவரை முற்றுகை துவங்கவில்லை. முகீதும் அப்துல் அஜீஸூம் தத்தம் படைகளுடன் வந்து சேரட்டும் என்றுகாத்திருந்தான் தாரிக்.

அந்த நிலைமையில்தான் அச்சம்பவம் நிகழ்ந்தது. தாரிக்கும்,

ஈஸாவும் தங்களுடைய மன வேதனையை வெளிக்காட்டாமலேயே ஜூலியனையும் டேவிடையும்தேற்றுவதில் அன்றிரவுப் பொழுதைக் கழித்தனர்.

பொழுது புலர்வதற்குள்ளாக அச்செய்தி முஸ்லிம் முகாமிலிருந்த அனைவருக்குமே எட்டிவிட்டது. ஆயிரக்கணக்கான வீரர்கள் புறப்பட்டு, அருகிலிருந்த காடுகளையும், மலைகளையும், பாதைகளில், ஆங்காங்கிருந்த கட்டிடங்களையும் ஒன்றுகூட விடாமல் துருவித்துருவிப் பார்த்து விட்டனர். காணமற்போன பெண்களைப் பற்றி யாதொரு துப்பும் துலங்கவில்லை.

மற்ற கோட்டைகளைப் போலல்லாமல் மாற்றமான அமைப்புடையதாக இருந்தது தாலதோக்கோட்டை. ஒன்றுக்குமேல் ஒன்ருக உயர்ந்து சென்ற மூன்று குன்றுகளைச் சுற்றிவளைத்து அதன் மதிற்சுவர்கள் எழுப்பப் பெற்றிருந்ததால் அது பலமான பாதுகாப்புடன் விளங்கியது.

கோட்டை மதிலின் அடிவாரத்தை ஒட்டினற்போல அதன் மேற்குப் பகுதியிலும் தெற்குப் பகுதியிலும் வளைந்து வளைந்து ஓடிக்கொண்டிருந்த டேகஸ் நதி அதற்கு இயற்கை அகழியாக அமைந்திருந்தது.கோட்டைக்குத் தெற்கே அந் நதியின் குறுக்கே கட்டப்பட்டிருந்த பாலம், அரபியரின் வருகைக்குச் சில நாட்களுக்கு முன்பாக சில இடங்களில் தகர்க்கப்பெற்று போக்கு வரத்துக்குப் பயனற்றதாகச் செய்யப் பட்டிருந்தது.

அதையன்றி மற்ற மூன்று புறங்களிலும் இருந்த வாயில்களும் கூடஅடைபட்டுக் கிடந்ததாலும், கோட்டைக்குள்ளிருந்து யாரும் வெளிவருவதோ உள்ளே நுழைவதோ கடுமையாகக் கட்டுப்படுத்தப் பட்டிருந்ததாலும், கோட்டையைச் சுற்றி வசித்து வந்த மக்களும்கூட குடிபெயர்ந்து, வெளியூர்களுக்கோ, கோட்டைக் குள்ளாகவோ சென்று விட்டதாலும் எவரையும் விசாரித்துத் தகவல் தெரிந்து கொள்வதற்கும் முடியாமலிருந்தது.

தாலதோவைச் சேர்ந்த வீரர்களின் வசம் அப்பெண்களிருவரும் சிக்கி கோட்டைக்குள் கடத்திச் செல்லப் பட்டிருக்கலாம் என்பதைத் தவிர்த்து வேறெந்த முடிவுக்கும் அவர்களால் வர முடியவில்லை.

கோட்டையின் மற்ற வாயில்களின் வழியாகக்கூட வெளியுலகத் தொடர்பு இல்லாதபடி தாலதோவை நெருக்கி முற்றுகையிட்டு, விரைவில் அதன் வீழ்ச்சிக்கு வழி செய்வதே உடனடியாக எடுக்கு வேண்டிய நடவடிக்கை என்று அவர்கள் முடிவு செய்தாகள்.

இரண்டொரு நாட்களுக்குள்ளாக முகீதும் கார்தோவாவிலிருந்து படையுடன் வந்து சேர்ந்தார். வெகு தொலைவில் மலாகாவிலிருந்த அப்துல் அஜீஸ் வந்து சேர மேலும் பல நாட்கள் பிடிக்கலாம் என்று தோன்றவே அவருடைய வருகைக்காகக் காத்திராமல் முற்றுகையைத் துவக்கினர் முஸ்லிம்கள்.

தாலதோவுக்கு வரக்கூடிய உதவி, பெரும்பாலும் வடக்கிலிருந்தும் மேற்கிலிருந்துமே வருவதற்கு வாய்ப்பிருந்ததால் அவ்விரு வாயில்களுக்கு அருகிலும் முற்றுகைப் படை குழுமியிருந்தது. தெற்கு வாயிலைச் சேர்ந்தாற்போலிருந்த பாலம் தகர்க்கப்பட்டிருந்ததனல் அந்தப்பகுதியில் முற்றுகை அவ்வளவு பல

மாக இல்லே. கோட்டைக்குகிழக் குப் பகுதியிலிருந்த இடங்களுள் பெரும் பாலானவை அரபியரின் வசமாகி விட்டிருந்தன. எனவே அந்த வழியாகப் போக்குவரத்து இருக்கக் கூடுமென அரபியர் எதிர்பார்க்கவில்லே.

இவ்வாருக சில தினங்கள் கழிந்தபின் ஒருநாள் அதிகாலேயில் கிறித்தவ இளைஞன் ஒருவனைத் தாங்கிக் கொண்டு குதிரையொன்று முஸ்லிம்களின் முகாமை நோக்கித் தலேதெறிக்க ஓடி வருவதை அங்கிருந்தவர்கள்கண்டார்கள். அதில் விசித்திரம் என்னவென்ருல் நிராயுத பாணியாக இருந்த அவ்விளைஞனின் முதுகில் அம்பொன்று தைத்திருந்ததுதான். இளைத்து, மெலிந்து, வெளுத்த முகத்துடன் காணப்பட்ட அவனுடைய உயிர் ஊசலாடிக் கொண்டிருந்த அந்த நேரத்திலும்கூட ஏதோ ஒரு வேகத்தால் உந்தப்பட்டே அவன் சென்று கொண்டிருக்கிருன் என்பது நன்ருக ஊன்றி கவனித்தவர்களுக்குத் தெளிவாகத்தெரிந்தது.

இஸ்லாமியப் படைத் தலேவனின் கூடாரம் எதுவென, அதன் மீது பறந்த கொடியைக்கொண்டு ஊகித்தறிந்து கொண்டவன் போல, நேராகத் தாரிக்கின் கூடாரத்தைச் சென்றடைந்த இளைஞன் அவசரமாகக் குதிரை மீதிருந்து கீழே குதித்தான். அவன் அப்போதிருந்த உடல் நிலேயில் அந்த அதிர்ச்சியைத் தாங்க இயலாமல் மரம்போலக் குப்புறச் சாய்ந்து விழுந்தான் அவன்.

சந்தடி கேட்டு வெளியில் விரைந்து வந்து பார்த்த தாரிக்கிற்கு ஒன்றும் புரியவில்லே.

"யார் இந்த இளைஞன்? பார்த்தால், கிறித்தவனைகத் தோன்றுகிறது. இவனுடையமுதுகில் யார் அம்பு எய்திருப்பார்கள்?" என்று கேட்டுக்கொண்டே அந்த அம்பைப் பிடுங்கவும் முதுகிலிருந்து இரத்தம் பீறிட்டது.

தளபதியின் கேள்விகளுக்கு பதில் யாருக்கும் தெரியவில்லே. இளைஞனுடைய உடலில் உயிர் எஞ்சியிருப்பது தெரிந்த தாரிக் இரத்தப் பெருக்கைத் தடுத்து, அவனுக்கு சிகிச்சை செய்ய ஏற்பாடு செய்தபின், இளைஞனின் முதுகிலிருந்து பிடுங்கி எடுத்த அம்பை ஆராய்ந்து பார்த்தான். ஸ்பானிய மன்னனின் படைகள் உபயோகிக்கும் அம்புதான் அது என்பதை அவன் உறுதிப் படுத்திக் கொண்டான். எனவே, தாலதோவிலிருந்து தப்பி முஸ்லிம்களிடம் தஞ்சம் புகுவதற்காக ஓடிவந்தவன் அவன் என்பது தளபதிக்குத் தெளிவாயிற்று. அவனுடைய உயிரைக் காப்பாற்றி, உணர்வு வரச் செய்து பேச வைத்தால் அவனிடமிருந்து அவசியமான தகவல்கள் கிடைக்கக் கூடும் என்று தோன்றியது.

தாலதோவிலிருந்து வந்த கிறித்தவன் ஆதலால் டேவிடுக்கோ அல்லது ஜூலியனுக்கோ அவனைத் தெரிந்திருக்கவும் கூடும் என்ற எண்ணம் தோன்றிய உடனே தாரிக் அவ்விருவரையும் அழைத்துவரச் செய்தான்.

அவன் நினைத்தது சரியாயிற்று!

வந்ததும் வராததுமாக அவ்வாலிபனின் முகத்தைத் திருப்பிப் பார்த்தவுடனே, "அன்டோனியோ!' என்று கூச்சலிட்டார், டேவிட்.

"இவனை நன்கு தெரியுமா உங்களுக்கு?" என்று தாரிக் கேட்டான்.

"தெரியாமலென்ன? இவனால் நேறிட்ட வினைதானே, எனக்கு ஏற்பட்ட துன்பமனைத்தும்!" என்று இகழ்ச்சி பொங்கும் குரலில் பேசினார் டேவிட்.

அதோடு தொடர்ந்து "இவன் எப்படி இங்கு வந்து சேர்ந்தான் அம்புக்காயம் எவ்வாறு ஏற்பட்டது?" என்று அவர் கேட்டார்.

"அதுதான் எங்களுக்கும் தெரியவில்லை, அதனால்தான் உங்களை அழைத்து வரச் சொன்னேன்!"

அந்த நேரத்தில் அவ்விளைஞன் முனகுவது கேட்டது. தாரிக்கும் டேவிடும் குனிந்து, காது கொடுத்துக் கேட்டனர்.

"ரேச்சல்!"

ஒரு பெரு மூச்சாக அவன் வாயிலிருந்து வெளிப்பட்டது அந்தப் பெயர்.

அவ்விருவரும் திடுக்கிட்டனர்.

"ரேச்சலா!" இருவரும் ஏக காலத்தில் கூவி விட்டனர்!

"இந்தப் படுபாவி இன்னும் அவளை மறக்கவில்லை பாருங்கள்!" என்றார், டேவிட்.

"அப்படியில்லை, டேவிட். அதை விட, அவளைப் பற்றித் தனக்குத் தெரிந்த ஏதோ ஒரு செய்தியை அவன் சொல்ல விரும்புகிறான் என்று எனக்குத் தோன்றுகிறது?"

மறு அதிர்ச்சி ஏற்பட்டது அவருக்கு. தாரிக் நினைத்தது ஒரு வேளை சரியாக இருந்தால்!

"ஆமாம்! அப்படி இருப்பது சாத்தியம்தான்! எப்படியாவது இவனைக் குணம் அடையச் செய்யும்படி முயன்று பார்ப்போம்!" என்று பதற்றத்துடன்

கூறினர் டேவிட்.

அதற்குள் அங்குவந்து சேர்ந்த ஜூலியன் பிரபுவும்நிலைமையைத் தெரிந்து கொண்டு, சியூட்டாவிலிருந்து அவனுடன் வந்திருந்த,தன் அரண்மனை வைத்தியரை உடனே வரவழைத்தான்.

"ஜூலியனின் மருத்துவர் அளித்த அவசர சிகிச்சையின் பயனை சிறிது நேரத்துக்குப்பின் அவ் விளைஞனுக்கு சற்று நினைவு திரும்பியதாகத் தோன்றியது. தன்னெதிரில் ரேச்சலின் தந்தையும், தன் முன்னாள் எஜமானருமான டேவிட் நிற்பதைக் கண்டு அவன் முகம் மலர்ந்தது. ஆனல் பேச முயன்ற அவனல் கோவையாக எதுவும் சொல்ல முடியவில்லை. மிகவும் சிரமப்பட்டு ஒவ்வொரு சொல்லாகத் தட்டுத் தடுமாறி சொல்லி முடித்தான். அவன்சொன்னதெல்லாம்,"ரேச்சல்......நிக்கோலாஸ்...... இளவரசி...... கிழக்கு ...... வாசல்...... ரோமாபுரி!" ஆகிய வார்த்தைகளே!

முதலில் ஒன்றும் புரியாமல் டேவிட், ஜூலியன் இருவருமே ஏக காலத்தில் அவனிடம் கேள்விக்குமேல் கேள்வியாகக் கேட்கத் தொடங்கினர்.

அவர்களுடைய கேள்விகளுக்கு பதிலளிக்க அவன் முயன்ருனயினும் அவனல் ஒன்றுமே இயலவில்லை. அவனுடைய நாக்கு ஒத்துழைக்க மறுத்துக் குழறியதைப் பார்க்கப் பரிதாபமாகஇருந்தது. அடுத்து சில விநாடிகளில் அவன் தலை ஒரு புறமாகச் சரிய அவனுடைய ஆவி உடலை விட்டுப் பிரிந்தது.

அவன் சொல்ல விரும்பிய முக்கியமான தகவலைத் தெரிந்து கொள்ளு முன்பே அவன் இறந்தது தங்கள் துர்அதிர்ஷ்டம் என்று ஜூலியன், டேவிட் இருவருமே தங்களை நொந்துகொண்டனர்.

ஆனல் தாரிக், ஈஸா ஆகிய இருவரும் சற்று நிதானத்துடன் சிந்தித்தனர். அதன் விளைவாக, அன்டோனியோ சொல்ல விரும்பியது இன்ன செய்தியாகத் தானிருக்கும் எனத் தங்களுக்குத் தோன்றியதை வெளியிட்ட போது அப்படித்தான் இருக்க வேண்டும் என்று மற்றிருவருக்கும்கூடப் பட்டது.

அதாவது, ரேச்சலும் மரியாவும் எப்படியோ பெரிய பாதிரியார் நிக்கோலாஸ் இடம் சிக்கியிருக்க வேண்டும். அவர்களைக் கடத்திக்கொண்டு, நிக்கோலாஸ் கோட்டையை விட்டு கிழக்கு வாசல் வழியாக வெளியேறி ரோமபுரியை நோக்கிப் பயணமாகி இருக்கிருர். அதையறிந்த அன்டோனியோ, தப்பியோடி அரபியர் முகாமுக்கு வர முயன்றிருக்கிருன். பாதிரியாருடன் சென்று கொண்டிருந்த கிறித்தவ வீரர்கள் அன்டோனியோவின் நோக்கத்தைப் புரிந்து கொண்டு அவன்மீது அம்பு எய்து அவனைக் கொன்றுவிட முயன்றிருக்கிருர்கள். அம்புக் காயம் பட்டும்கூட மனம் தளர்ந்து விடாமல் தப்பி வந்து தன் நோக்கத்தை ஓரளவு நிறை வேற்றிவிட்டு உயிர் விட்டிருக்கிருன், அன்டோனியோ.

அதற்குமேல் காலங்கடத்தாமல் ஐநூறு வீரர்களை மட்டும் தங்களின் பின்னல் வரச்சொல்லி விட்டு, தாரிக் தன்னுடன் ஜூலியன், ஈஸா, டேவிட் ஆகிய மூவரையும் அழைத்துக் கொண்டு கோட்டையின் கிழக்கு வாசல் பகுதியை நோக்கி விரைந்தான். வழி நெடுகவும் சிதறியிருந்த அன்டோனியோவின் இரத்தத் துளி

கள் அவர்களுக்கு வழிகாட்டிய தால் தங்களுடைய குதிரைகளை தங்கு தடையில்லாமல் செலுத்து வது அவர்களுக்கு சாத்தியமா யிற்று.

அவர்களுடைய ஊகப்படியே, கிழக்கு வாயிலுக்குச் சற்றுத் தொலைவிலிருந்துதான் இரத்தத் துளிகள்காணப்பட்டன. அங்கி ருந்து வடகிழக்காக வளைந்து சென்ற குறுகலான பாதையில் நூற்றுக் கணக்கில் குதிரைகள் கடந்து சென்றதற்கான அறிகுறி கள் தென்பட்டன. அதைக்கண்ட போது அவர்களின் நம்பிக்கை வலுப்பெற்றது.

அன்டோனியோ அவ்வாறு செய்ததற்கான காரணம் என்ன வாக இருக்கலாம் என்பதைத் தாரிக்கின் அருகில்சவாரிசெய்து வந்தடேவிட் விளக்கிக்கொண்டே வந்தார்.

தன் சொத்துக்களையும் தன்னு டைய மகள் ரேச்சலையும் அடைய விரும்பிய அன்டோனியோவை என்ன காரணத்திற்காகவோ பாதாளச் சிறையில் பாதிரியார் அடைக்கச் செய்தார் என்று, தான் அறிந்திருந்த தகவலை தாரிக்கிடம் கூறினார் டேவிட். அப்படிப்பட்ட மனிதர், தான் விரும்பிய பெண்ணைக் கடத்திக் கொண்டு போவதைக் கண்டு வெகுண்டு, அன்டோனியோ அவ ரைக் காட்டிக்கொடுக்கத் துணிந் திருக்கக் கூடும் என்றார், அவர். பாதாளச்சிறைகளில் கைதிகள் நடத்தப்படும் மிருகத்தனமான முறை அன்டோனியோ போன்ற ஓர் இளைஞனிடம் அம்மாதிரி யான பழிவாங்கும் உணர்ச்சி யைத் தோற்றுவிப்பது இயற் கையே என்றார், அவர்.

தாரிக்கின் கட்டளைப்படி புறப் பட்ட ஐநூறு வீரர்களும்கூட அவர்களின் பின்னாலேயே விரைந்து வந்து கொண்டிருந்த னர்அவர்கள் முன்னேறிச்சென்ற வழியிலிருந்த கிராமங்களில் வாழ்ந்த மக்களை விசாரித்ததிலி ருந்து பெரிய பாதிரியார் அன்று காலை நேரத்தில் அவ் வழியாகத் தம் பரிவாரத்துடன் சென்றார் என்பது உறுதியாயிற்று. நூற் றுக்கணக்கான தேவாலய ஊழி யர்களோடு ஆயிரம் பேர் கொண்ட குதிரைப் படை ஒன் றும் அவர்களுக்குத் துணையாகச் சென்றதாக தாரிக் முதலியோரு க்குத் தெரிய வந்தது, அதற்கு மேல் தங்களுடைய குதிரைகளை வேகமாகச் செலுத்தத் தொடங் கினர் முஸ்லிம் வீரர்கள்.

நண்பகல் கடந்து சிறிது நேரத் துக்குப்பின் முன்னால் சென்று கொண்டிருந்த் பாதிரியாரின் பரிவாரம் அவர்களுடைய கண்க ளுக்குத் தென்படத் தொடங்கி யது. தங்களுக்குப் பின்னால் முஸ் லிம்களின் படை தொடர்ந்து வந் ததை அறிந்ததும் பாதிரியாரின் படை தன் வேகத்தைக் குறைத் துக்கொண்டு தம்மைத் தொடர் ந்து வருபவர்களின் படை பலத்தை எடை போடுவது போலத் தோன்றியது.

இன்னும் சிறிது நேரத்துக்குப் பின் முன்னால் போய்க் கொண்டி ருந்த கிறித்தவப்படை ஓரிடத் தில் அப்படியே நின்றது.

தாரிக்கும் அவனுடன் சென்ற வர்களும் அந்த இடத்தைச் சென்றடைந்தபோது கிறித்தவர் களின் படை அவர்களை எதிர்த் துத் தாக்குவதற்கு ஆயத்தமாக நிற்கக் கண்டார்கள்!

(தொடரும்)

# வகுப்புவாதம்!

"ஒரு மனிதன் செய்ய வேண்டிய முதல் கடமை
அவனுடைய சொந்த சமுதாயத்திற்கே"

இவ்வாறு கூறியவர் வகுப்புவாதி என்று தூற்றப்படும் எவரும் அல்ல!

காந்திஜீ அவர்கள் தென்னாப்பிரிக்காவில் வாழ்ந்த காலத்தில் ஹெர்மான் கிளீன்பேக் என்னும் கட்டடக் கலைஞர் ஒருவர் அவருக்கு மிக நெருங்கிய நண்பரானார். அவர் ஒரு யூதர்.

நெடுங்காலப் பிரிவுக்குப் பின் 1939-ம் ஆண்டில் அந்த யூத நண்பர் இந்தியாவுக்கு வந்து காந்திஜீயைச் சந்தித்தார்.

சந்ததி எதுவும் அற்றவரான கிளீன்பேக் தமக்குப் பிறகு தம்முடைய மிகத்திரண்ட ஆஸ்தி முழுவதையும் காந்திஜீக்குச் சேரவேண்டுமென "உயில்" எழுதி வைக்கப்போவதாகச் சொன்னார். "இந்திய மக்களின் மாபெரும் தலைவரான நீங்கள் அச் செல்வத்தை உங்களுடைய விருப்பப்படி செலவிடலாம்!" என்று அவர் காந்திஜீயிடம் கூறினார்.

அதை ஏற்றுக்கொள்ள மறுத்து, மேற்சொன்னவாறு அந்த யூதருக்கு பதிலளித்தார், காந்திஜீ.

"எனவே, உங்களுடைய செல்வத்தை யூத சமுதாயத்தின் நன்மைக்காகவே செலவிடுங்கள்!" என்று கிளீன் பேக்கிடம் காந்திஜி கூறினார்.

தம் நண்பரின் யோசனைப்படியே, தம் செல்வத்தை யூத சமுதாய ஸ்தாபனங்கள் பலவற்றிற்குப் பகிர்ந்தளித்தார், கிளீன் பேக்.

ஆதாரம்—நியூஸ் ப்ரம் இஸ்ரயீல்.

# திருமணம்

மேலக்காவேரி ஜனாப் கே. அப்துல் மஜீது அவர்களின் புதல்வி மும்தாஜ் பேகம் மணாளிக்கும், அய்யம் பேட்டை ஜனாப். கே. எம். அப்துல் காதர் அவர்களின் புதல்வர் நூர் முஹம்மது மணாளருக்கும் 26—4—67 அன்று மணமகள் இல்லத்தில் சிறப்பாக திருமணம் நடைபெறறது.

மணமக்கள் எல்லா நலனும் பெற்று சீரும் சிறப்போடும் நீடூழி வாழ வாழ்த்துகிறோம்.

[சூடான் நாட்டின் அதிபர் ஸையித் இஸ்மாயீல் அல்அஜ்ஹரீ அண்மையில் நம் நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்தார். சூடானைப் பற்றியும் அவருடைய வாழ்க்கையைப் பற்றியும் கீழ்க்கண்டுள்ள கட்டுரையில் ரசமான விவரங்கள் தரப்பட்டுள்ளன]

# சூடான் நாடு சுதந்திரம் பெற்ற வரலாறு!

*ஐம்பதாண்டுகால ஆங்கில-எகிப்திய ஆட்சிக்குப் பிறகு 1956 ஜனவரி முதல் தேதியன்று சூடானில் குடியரசாட்சி ஏற்பட்டது.*

*ஆப்பிரிக்காவிலேயே மிகப் பெரிய நாடு சூடான். அதன் பரப்பளவு பத்து லட்சம் சதுர மைல். அதைச் சுற்றிலும் 8 சுதந்திர ஆப்பிரிக்க நாடுகள் அமைந்திருக்கின்றன. ஹாமைட் என்ற இனமும், நீக்கிரோ இனமும் கலந்த கூட்டு இனத்தவரே சூடான் மக்கள். அந்நாட்டின் நில அமைப்புக் காரணமாகவும், மக்கள் கலப்பு இனத்தவராக இருப்பதன் காரணமாகவும், அங்கு அராபிய ஆப்பிரிக்க கலாசாரங்களின் சேர்க்கை ஏற்பட்டிருக்கிறது.*

## வெளி வர்த்தகம்

*சூடான் நாடு விளைபொருள்களையும், மூலப் பொருள்களையும், ஏற்றுமதி செய்து இறக்குமதிகளுக்கு நிதி வசதியைப் பெற்றுவருகிறது. பருத்திதான் அதன் முக்கிய ஏற்றுமதிப் பொருளாகும். அரேபிய கோந்து, நிலக்கடலை, எள், பருத்தி விதை, ஆட்டுத்தோல், மாட்டுத் தோல் முதலியவையும் முக்கியமாகக் குறிப்பிடத் தக்க பொருள்கள். விளையும் பயிர்களில் சுமார் மூன்றில் ஒரு பகுதி ஏற்றுமதியாகிறது.*

*சூடான் உபயோகிப்பாளர் பண்டங்களையும் மூலதனச் சரக்குகளையும் இறக்குமதி செய்கிறது. உபயோகிப்பாளர் பண்டங்கள் 20 சதவிகிதமும் நிர்மாண சாதனங்கள் 50 சத விகிதமும் இறக்குமதி செய்யப்படுகின்றன. அரசாங்கத்தின் வருமானத்தில் கிட்டத்தட்ட 70 சதவிகிதம் வெளி வர்த்தகத் தீர்வைகள் மூலம் பெறப்படுகிறது.*

*நாடு முழுவதிலும் பண்டங்கள் நியாயமான விலைக்குக் கிடைக்கச் செய்வதற்காக சுதந்திர வர்த்தகக் கொள்கை ஒன்றை சூடான் அரசாங்கம் பின்பற்றுகிறது. சூடானில் தொழில்களுக்கும். விளை பொருள்களுக்கும் பாதுகாப்பு அளிக்கும் வகையில் சில பண்டங்களின் மீதுதான் இறக்குமதி கட்டுப்பாடு இருக்கிறது. சூடான் நாட்டினர் மட்டுமே வர்த்தகத்தை நடத்துவதற்கு ஏற்பாடு செய்யும் புதிய கொள்கையொன்றை சூடான் அரசாங்கம் அமல் நடத்தவிருக்கிறது. இதற்காகக் கூடிய விரைவில் ஒரு சட்டம் இயற்றப்படவிருக்கிறது.*

## விலங்குச் செல்வம்

விலங்குச் செல்வத்தில் சூடான் சிறந்து விளங்குகிறது. அங்கு 20 லட்சம் ஒட்டகங்களும், 9102500 கால்நடைகளும், 86,60,000 ஆடு களும், 6854 வெள்ளாடுகளும் இருக்கின்றன என்று மதிப் பிடப்பட்டிருக்கிறது. விலங்குச் செல்வத்தின் மூலம் சூடான் நாட்டிற்கு தேசீய வருமானமும், அந்நியச் செலாவணியும் கிடைத்து வருகிறது.

## தொழில்

தனியார் துறையில் பல தொழிற்சாலைகள் அமைக்கப்பட் டிருக்கின்றன. அரசாங்கமும் சில பெரிய தொழிற்சாலைகளை நிறுவியிருக்கிறது. இவற்றில், பழபதனத் தொழிற்சாலை, சர்க் கரைத் தொழிற்சாலை, வெங்கா யத்தை நீரகற்றிப் பக்குவம் செய்யும் தொழிற்சாலை, பால் தயாரிப்புத் தொழிற்சாலை, ஆகி யவை முக்கியமானவை. தனி யார் தொழிலதிபர்களுக்குக் கடன் வசதிகள் வழங்குவதற் காகச் சூடானில் தொழில்துறை பாங்கு ஒன்றும் நிறுவப்பட்டிருக் கிறது.

## அதிபரின் வாழ்க்கைக் குறிப்பு

1900 அக்டோபர் 25-ந் தேதி பிறந்த ஸையித் இஸ்மாயீல் அல் அஜ்ஹரீ சூடானில் கோர்டன் நினைவுக் கல்லூரியிலும், பின்னர் பெய்ரூத் நகரிலுள்ள அமெரிக்க பல்கலைக் கழகத்திலும் கல்வி பயின்று 1930-ஆம் ஆண்டில் பட் டம் பெற்றார். கோர்டன் நினை வுக் கல்லூரியில் அவர் ஆசிரிய ராகச் சேர்ந்து பணியாற்றினார். அவருடைய அறிவுரையைப் பெற்ற மாணவர்கள்' தேசிய இயக்கத்தில் பங்கு கொண்ட னர். அந்நிய ஆட்சியிலிருந்து நாட்டை விடுதலை செய்வதற்காக நடைபெற்ற மூக்கிய போராட் டத்தில் சிறப்பான பங்கு வகித்து **சூடான் பட்டதாரிகள் காங்கி** ரஸுக்கு அவர் மாபெரும் சக்தி யாக விளங்கினார். அவருடைய முயற்சியின் பேரில்தான் இந்த காங்கிரஸ் பின்னர் மாபெரும் அரசியல் இயக்கமாக உருவா கியது. 1940-ம் ஆண்டில் அவர் பட்டதாரிகள் காங்கிரசின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட் டார். 1948-ல் இஸ்மாயீல் அல் அஜ்ஹரி ஒரு பிரத்தியேகக் கட்சியை ஆரம்பித்தார். அந்நிய ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற்று சுயாட்சி நிறுவுவதற்கு மக்களுக்குள்ள உரிமையை அந் தக் கட்சி வலியுறுத்தியது.

1948-ல் சட்டசபை பகிஷ் கரிப்பு இயக்கத்திற்கு அவர் ஏற் பாடு செய்தார், அவர் கைது செய்யப்பட்டு, நான்கு மாதங்கள் சிறையில் அடைக்கப்பட்டார். 1953 பிப்ரவரியில், சூடானுக்கு சுயநிர்ணய உரிமையை வழங்கும் ஆங்கில-எகிப்திய ஒப்பந்தம் கையெழுத்தாகியது. இஸ்மா யீல் அல்அஜ்ஹரீயின் நீண்ட அரசியல் போராட்டத்தின் இணையற்ற வெற்றி இதுவே. அதே ஆண்டில் அவர் தற்போ தைய தேசிய யூனியன் கட்சியை நிறுவினார். அதன் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். முத லாவது தேர்தலில் இந்தக் கட்சி பெரும்பான்மை பலத்துடன் தேர்ந்தெடுக்கப்பட்டது. இஸ் மாயீல் அல்அஸ்ஹரீ முதலாவது பிரதம மந்திரியாக ஆனார்.

1956-ம் ஆண்டின் இறுதியில் பார்லிமெண்டில் அவருடைய அரசாங்கம் தோல்வியடைந்த போதிலும், ராணுவம் ஆட்சிப் பொறுப்பை ஏற்றதற்கு முன் பிருந்த தேசீய அரசாங்கதிலும் அவர் மீண்டும் பிரதமராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். மக்க ளாட்சி மீண்டும் ஏற்பட்ட பிறகு, 1965-ல் சூடான் குடியரசின் அதி பராக ஸையித் இஸ்மாயீல் அல் அஸ்ஹரீ தேர்ந்தெடுக்கப் பட் டார்.

# வினா? விடை

* பட்டத்தைப் பறித்த பிறகு முஹம்மதலி கிளே உலக வீரராக மாட்டாரா?
* "கேரோ" என்றால் என்ன?
* "சிவசேனை"க்கு காங்கிரஸ் ஆதரவு உண்டா?
* கேரளத்தில் லீக் மந்திரிகள் பதவி துறப்பார்களா?

எம். இஸ்மாயீல் கனி,
தென்காசி.

உலகக் குத்துச் சண்டை வீரர் முஹம்மது அலி கிளே யின் பட்டத்தை உலக குத்துச்சண்டை சங்கம் பறித்துக் கொண்டதனால் அவருக்கு என்ன நஷ்டம்?

ப: உலகக் குத்துச் சண்டைசங்கத்தினரின் இழிவான மனப்போக்கைத்தான் அந்த நடவடிக்கை காட்டுகிறதே தவிர அவருக்கு அதனால் எவ்வித நஷ்டமும் இல்லை. "அகில உலக வீரர்" பட்டத்துக்கு உரியவராக அவரை உலகம் ஏற்றுக்கொண்ட பிறகும்கூட அங்கீகாரமளிப்பதற்கு இரு ஆண்டுக்காலம் மறுத்துக் கொண்டிருந்தது அச்சங்கம், அமெரிக்காவுக்கு மட்டுமான தேசிய விருது ஆக இருந்தால், அமெரிக்க அரசாங்கத்துக்குக் கீழ்ப்படிய மறுத்த காரணங்காட்டி அதைப் பறித்துக் கொள்வது நியாயமான நடவடிக்கையாக இருக்கலாம். அகில உலக வீரர் பட்டத்தைப் பறிக்க ஒரு நாட்டினர் மட்டும் நடவடிக்கை எடுப்பது செல்லுபடியாகாது.

அச்சங்கத்தினரின் முகத்தில் ஒரு குத்து விடுவது போல பின்வருமாறு பதிலளித்திருக்கிறார் முஹம்மதலி கிளே. "உலகவீரர் பட்டம் எனக்கு எவராலும்வழங்கப்பட்டதல்ல என் குத்துச்சண்டை திறமையால் நான் கோதாவில் வென்றதாகும் அது!"

எம். எச். செய்யது அஹமது,
இரவாஞ்சேரி.

கே: முஹர்ரம் மாதம் முதல் பிறையிலிருந்து பத்தாம் பிறை

வரை புதுமணத் தம்பதிகள் ஒருவரையொருவர் பார்க்கக் கூடாதென்றுசொல்கிறார்களே இஸ்லாமிய மார்க்கக் கட்டளை யா அது?

ப: முஹர்ரம் மாதம் சம்பந்தப்பட்ட எத்தனையோ மௌட்டீக நம்பிக்கைகள், செயல்களுள் இதுவும் ஒன்று. அப்படி மார்க்கக் கட்டளை எதுவும் கிடையாது.

எஸ். எம். யூசுப்,
குளச்சல்.

கே: முஹர்ரம் மாதம் பத்தாம் நாளில் குழியில் தீப் பரப்பி அதில் இறங்கி அங்கு மிங்கும் நடப்பது இஸ்லாம் மார்க்கத்தில் அனுமதிக்கப் பட்டிருக்கிறதா?

ப: மூடத்தனமான அந்தச் செயலுக்கும் இஸ்லாத்திற்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. விலக்கப்பட்டு வெறுத்து கண்டித்து ஒதுக்கப்பட வேண்டிய செயல்களுள் இதுவும் ஒன்று

எம். காசியப்பன்,
திருவொற்றியூர்.

கே: இப்போது பத்திரிகைகளில் நாள்தோறும் அடிபடும் "கேரோ" என்னும் கிளர்ச்சி முறை பற்றி விளக்கம் தேவை?

ப: "கேராவ்" என்றால் சூழ்ந்து கொண்டு முற்றுகையிடுதல் எனப்பொருள். நடைமுறையில் இது மிகக் கொடுமையான முறையில் நடைபெறுகிறது. வங்காளத்தில் தொடங்கிய இந்த வன்முறை இயக்கம் நாடெங்கும் விஷம் போலப் பரவி வருகிறது.

தொழிலாளர்கள் தம் குறைகளைத் தீர்த்துக் கொள்வதற்காக, அனைவரும் சேர்ந்து, தொழில் சாலைகளின் உரிமையாளர்கள், நிர்வாகிகள் இருக்கும் இடங்களைச் சூழ்ந்து கொண்டு, அவர்களை அடைத்துப் போட்டு, சில சமயங்களில் துன்புறுத்தியும்கூட, தங்கள் கோரிக்கைகளைப் பூர்த்தி செய்யும் வகையில் எழுதி வாங்கிக்கொண்ட பின்னரே அவர்களை விடுதலை செய்வது என்பது இத் திட்டத்தின் செயல் முறை. கிரிமினல் குற்றமாகும் இது. கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த மே.வங்க தொழில் இலாகாமந்திரியைத் தவிர்த்து நாட்டிலுள்ள ஆட்சியாளர் அனைவரும் ஒரு முகமாக இவ்வன்முறைச் செயலை வன்மையாகக் கண்டித்துள்ளனர்.

ஆ. சி தாஜுத்தீன்,
கார்நிக்கோபார்,(அந்தமான்)

கே: மோதினார் இல்லாத ஊரில் வசிக்கிறமுஸ்லிம்.ஆடு, கோழி, அறுத்து பழக்கமில்லாதபோது, அவற்றின் இறைச்சியைத் தின்பதற்கு ஏதாவது விதிவிலக்கு உண்டா?

ப: மோதினார் என்பவர் பாங்கு சொல்லி மக்களைத் தொழுகைக்கு அழைப்பதற்காக ஏற்பட்டவரே யன்றி

**ஆடு, கோழி அறுப்பதற்கல்ல.** ஆடு, கோழி அறுத்து பழக்க மில்லாவிட்டாலும் ஈமான் உறுதியாக இருந்தால், பழகுவது ஒன்றும் சிரமமல்ல. நீங்கள் கூறும் சந்தர்ப்பத்தில், அல்லாஹ்வின் பெயரைச் சொல்லி அறுக்கப்படாத மாமிசம் சாப்பிடுவதற்கு விதி விலக்கு கிடையாது.

அப்துல் ஜப்பார்,
பெங்களூர் சிட்டி.

**கே: மகாராஷ்டிர மாநிலத்தில் தென்னாட்டினருக்கு எதிரான சிவசேனா நடவடிக்கைகள் காங்கிரஸ் மந்திரிகளின் ஆதரவுடன நடப்பதாகக்கூறப் படுவது உண்மையா!**

ப: **உண்மையாக** இருக்கும் **என்றுதான்** தோன்றுகிறது. கிருஷ்ணமேனன் போட்டியிட்ட இரு தேர்தல்களின் போதும் காங்கிரஸ் வேட்பாளருக்குப் பக்க பலமாகவே **அந்த** இயக்கம் **இருந்ததால்** அதைக் காங்கிரஸ்காரர்கள் ஆதரித்துப் பயனடைந்தார்கள்.

நாட்டின் மிக உயர்ந்தபதவிகளில் அமர்ந்திருக்கும் துணைப் பிரதமர், மொரார்ஜி தேசாய், உள்துறை மந்திரி சவான் போன்றவர்களின் பேச்சுக்களை கவனிக்கும் போது அந்த ஐயம் உறுதிப் படுகிறது.

“சிவசேனைக் காரர்கள் புதிதாக ஒன்றும் செய்து விடவில்லை. முன்னாட்களில் தமிழ் நாட்டில் தி. க. வினரும் தி. மு. க. வினரும் செய்ததையே இப்போது மகாராஷ்டிரத்தில் செய்கிறார்கள்!” என்கிறார், திரு மொரார்ஜீ!

“குறுகிய பிராந்திய மனப்பான்மைகளைக் கண்டிக்கும் போது, சிவசேனை தோன்றியதற்கு ஏதாவது உண்மையான குறைகள் காரணமாக இருந்தால் அதைத் தீர்க்க முயல வேண்டும்!” என்று திரு சவான் கூறியுள்ளார்.

சிவசேனையின் நடவடிக்கைகளுக்குக் நியாயம் கற்பிக்கும் இத்தகைய பொறுப்பற்ற பேச்சுக்களினால் அது மேலும் வலுக்குமே தவிர குறையாது. வடநாட்டினரிடையே தோன்றியுள்ள குறுகலான அம் மனப்பான்மைக்கு தூபம் போடுவது, தென்னாட்டினரிடையே அதற்கு எதிர் நடவடிக்கையைத் தூண்டிவிடுவதோடன்றி பிரிவினை சக்திகளுக்கு ஆக்கம் அளிக்கும் என்பதை அகில இந்தியத் தலைவர்கள் எனப் படுவோர் உணர்ந்து,பொறுப் போடு பேசவும், உரிய நடவடிக்கை எடுக்கவும்வேண்டும்.

அப்துல் வஹாப், மதுரை-2

**கே: திருமங்கலம் தேர்தலில் காங்கிரஸ் ஜெயித்தது பொதுத் தேர்தலுக்குப் பின் அதன் செல்வாக்கு மீண்டும் கூடிவிட்டது என்று காட்டுகிறதா?**

ப: இல்லவே இல்லை! பெரும்பாலான காங்கிரஸ் காரர்களும்கூட அவ்வாறு நினைக்கவில்லை. எதிர்க்கட்சி களின் வாக்குகள் சிதறிவிட் டன. மொத்தம் பதிவான 61,419 வாக்குகளில் 20319 தான் காங்கிரஸ் வேட்பாள ருக்குக் கிடைத்தன. அங்கும் எதிர்க்கட்சிகள் கூட்டு சேர்ந் திருந்தால் காங்கிரஸ் அபேட் சகர் வெற்றி பெற்றிருக்க முடி யாது என்று காமராஜரே பகி ரங்கமாக ஒப்புக் கொண்டுள் ளார்.

அப்துல் அஜீஸ்,
கும்பகோணம்

கே: "பெரிய பெரிய திட் டங்களை நாங்கள்தான் வகுத்து நிறைவேற்றினோம். அதனால் நாடு சுபிட்ச நிலையில் இருக்கி றது?" எதிர்க் கட்சிகளிடம் என்ன திட்டம் இருக்கிறது? என்று காங்கிரஸ் காரர்கள் கேட்கிறார்களே அதற்கு என்ன பதில்!

ப: நம் நாட்டின் பொரு ளாதார சக்திக்கு அப்பாற் பட்ட அளவில் வெளிநாடுகளி லிருந்து பல ஆயிரம் கோடி ரூபாய்கள் கடன் வாங்கி நிறைவேற்றிய கவைக்குத வாத திட்டங்களின் விளைவு தான் இன்றைய மோசமான பொருளாதார நிலையும் பண வீக்கமும் என்பதுதான் உண் மை. ஒரு சிறிது நல்ல பலன் ஏற்பட்டிருந்தாலும் அது பொதுமக்களுக்குப் பயன்

## உரையாடல்

மக்களின் அறிவு ஆற்ற லுக்கேற்ப அவர்களிடம உரையாடுதல் வேண்டும்.

பிறருடன் உரையாடும் போது, பின்னர் எண்ணி வருந்தத் தக்க சொற்களைப் பேசாதீர்கள்!

—நாயக வாக்கியம்.

படாமல் ஒரு சில கோடீஸ்வரர் களையே மேலும் கொழுக்க வைத்துள்ளது.

எப்போதும் கற்பனை உல கிலே மிதக்கும் திட்ட மந்திரி அசோக மேத்தா போன்றவர் களே இப்போது உண்மை நிலையை உணர்ந்து கொள் ளத் தொடங்கிவிட்டனர். அவர் அண்மையில் பின்வரு மாறு பேசியுள்ளார்: "நாட் டிற்கு இப்போது வேண்டியது பெரிய திட்டமா, சிறிய திட் டமா, என்ற கேள்வியல்ல. நடைமுறையில் அமல் நடத் துவதற்கு சாத்தியமான திட் டமே நமக்குத் தேவை. நமது பணவசதிக்குத் தகுந்தவாறே திட்டம் அமைந்திருக்கவேண் டும் என்று சொல்லத் தேவை யில்லை."

இதுவரையில் அவ்வாறு இருந்ததில்லை என்று அவர் களே ஒத்துக் கொள்வதாகத் தானே இதற்குப் பொருள் கொள்ள வேண்டும்!

ஹபீபு முகம்மது,
சென்னை-1.

கே; உருக்கு இரும்பின் மீதிருந்த கட்டுப்பாடுகளை இந்திய அரசாங்கம் நீக்கியிருப்பது புத்திசாலித்தனமா ?

ப: இந்த நடவடிக்கையால் முக்கியமான ஒரு நன்மை உண்டு. பெர்மிட் ஊழல்கள் குறைவதுதான் அது. பெர்மிட் வசதிகள் குறையும் போது காங்கிரஸ் கட்சிக்குக் கிடைக்கக்கூடிய நன்கொடைகளும் குறைவது இயற்கையே.

25 ஆண்டுகளுக்கு முன்பு இரண்டாவது உலகச் சண்டையின்போது உருக்குக் கட்டுப்பாடு அமலுக்கு வந்தது. சில இனங்களில் விலை குறையவும் வாய்ப்பு இருப்பதாகக் கூறப்படுகிறது. விலைவாசிகளைத் தொடர்ந்து கண்காணித்து, தேவை ஏற்பட்டால் உரிய காலத்தில் மீண்டும் தலையிடுவதாகவும் சர்க்கார் உறுதிகூறி இருப்பதால் இந்த நடவடிக்கை வரவேற்கத் தக்கதே.

முஹம்மது குஞ்சு,
கொல்லம்.

கே: கேரளத்தில் முஸ்லீம் லீகின் எதிர்ப்பை மதிக்காமல் கூட்டு சர்க்கார் மதுவிலக்கை ரத்து செய்து விட்டார்களே, அது லீகுக்கு காட்டப்பட்ட அவமதிப்பு தானே ?

ப: அச் செயலை அவமதிப்பு என்று கொள்வதற்கில்லை. அரசாங்கம் அமைக்கு முன்பே அதுபோன்ற சிக்கல்கள் எதிர்பார்க்கப் பட்டது தான். அம்மாதிரி நிகழும்போது கூட்டு அரசாங்கத்தில் அதனால் பிளவு ஏற்படாமலிருக்கும்படி செய்யும் பொருட்டுஒவ்வொரு கட்சியின் பிரதிநிதிகளையும் கொண்ட கமிட்டி ஒன்று ஏற்படுத்தப் பட்டுள்ளது. கருத்து வேற்றுமைகள் அங்கு அலசப் பட்டு முடிவுகள் எடுக்கப்படும். இது போன்ற பிரச்னைகள் மந்திரிசபை கவிழ்வதற்கு இடமளிக்கலாகாது என்று கூட்டுக் கட்சிகளுக்குள் முன்னதாகவே ஓர் உடன்பாடு ஏற்பட்டுள்ளது.

கேரளத்தில் முன்பு பூரண மதுவிலக்கு இல்லை என்பதும் இங்கு குறிப்பிடத்தக்கது. தன் பலத்த எதிர்ப்பைத் தெரிவித்துக்கொண்ட முஸ்லிம் லீக் கேரளத்துக்கு நிலையான நல்லாட்சி தொடர்ந்து நீடித்திருக்க வேண்டுமென்ற உயரிய நோக்கத்துடன் பெரும்பான்மையினரின் விருப்பத்துக்குக் கட்டுப்பட்டு பதவியில் நீடித்து வருகிறது.

முஸ்லிம் லீக் பதவி துறப்பதன் மூலம் கூட்டு உடையலாம் என்று எதிர்பார்த்திருந்த காங்கிரஸ் கட்சிதான் ஏமாந்தது !

Edited & Published by N. B. Rameeza 18, Ramasamy St, Madras-1. Printed by V. Sambandan at Sengunthamithran Press. 33 Armenian St., Madras-1